| | ரூ. பை |
|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 12 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | 3 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் கதாமிருதம் (முதல் பாகம்) | 8 00 |
| (இரண்டாம் பாகம்) | 8 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 8 00 |
| ஸ்ரீராமகிருஷ்ண உபநிஷதம் | 1 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதைகள் | 3 50 |
| குருதேவர் வாக்கியம் | 1 25 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் கதை | 0 35 |
| ஸ்ரீ சாரதாதேவியார் அவரது வரலாறும் திருவாக்கும் | (அச்சில்) |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 50 |
| சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி) சாதா பைண்டு | 12 00 |
| காலிகோ பைண்டு | 16 00 |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 4 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 2 00 |
| விவேகானந்தர் (மூவர்ணப் படங்களுடன்) | 2 50 |
| சுவாமி விவேகானந்தரின் சம்பாஷணைகள் | 6 00 |
| ,, ,, காலிகோ | 7 00 |
| இந்தியப் பிரசங்கங்கள் (காலிகோ) | 6 00 |
| கருமயோகம் | 2 00 |
| பக்தியோகம் | 1 50 |
| இராஜயோக உரைகள் | 2 50 |
| நமது தாய்நாடு | 2 00 |

| | ரூ. பை |
|---|---|
| கல்வி | 2 50 |
| பாரதப் பெண்மணிகள் | 2 50 |
| தற்கால இந்தியா | 1 00 |
| சிகாகோ பிரசங்கம் | 1 00 |
| எனது வாழ்வும் பணியும் | 0 85 |
| எனது போர்முறை | 0 75 |
| எனது குருநாதர் | 1 25 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 60 |
| விவேகானந்தர் பாதையிலே... | 0 50 |
| ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 00 |
| சுவாமி இராமகிருஷ்ணானந்தர் | 3 50 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 50 |
| திரு அருள்மொழி | 6 00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை | 3 00 |
| இந்துமத ஸாரம் | 3 00 |
| பக்தி ஸாரம் | 2 25 |
| பக்தி மார்க்கம் | 1 00 |
| நாரதர் கலகம் | 4 75 |
| கடோபநிஷதம் (நாடகம்) | 2 00 |
| ப்ரச்னோபநிஷதம் (நாடகம்) | 2 00 |
| வேதாந்த ஸாரம் | 2 00 |
| பஜனாவளி | 5 00 |
| ஆத்ம நிவேதனம் | 2 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞானமுரசு | 0 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்புமுரசு | 0 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீரமுரசு | 0 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோகமுரசு | 0 80 |
| ஸ்ரீ சங்கரரின் வேதாந்த முரசு | 0 80 |
| புத்தரின் அற முரசு | 0 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள்முரசு | 0 80 |

# Some of our Publications






**SRI RAMAKRISHNA MATH**
16, RAMAKRISHNA MATH ROAD,
MYLAPORE, MADRAS-600 004.

| Title | | Rs. |
|---|---|---|
| Science of Human Development (Bhagavad Gita) | | 3-50 |
| The Ethical Philosophy of the Gita | | 4-50 |
| Upadesasahasri | Ordinary | 10-00 |
| | Deluxe | 18-00 |
| Atmabodha | Board 7-50 Deluxe | 15-00 |
| Vakyavritti and Atmajnana Upadeshavidhi | | 4-00 |
| Panchadasi of Sri Vidyaranya | Ordinary 18-00 Deluxe | 24 00 |
| Yatindramatadipika of Srinivasadasa | Board 10-00 Deluxe | 15-00 |
| Path to Perfection | | 0-60 |
| For Thinkers on Education | | 4-00 |
| The Ancient Quest | | 2-00 |
| Hinduism, its Meaning for the Liberation of the Spirit | | 7-50 |
| Atman Alone Abides | Ordinary | 10-00 |
| | Deluxe | 20-00 |
| Vedic Religion and Philosophy | | 4-50 |
| How to know God | | 5-50 |
| Narayaneeyam of Sri Meppattur Narayana Bhattatiri | Ordinary | 15-00 |
| | Calico | 25-00 |
| The Devi Mahatmyam or Glory of the Divine Mother | Ordinary 4-00 Superior | 6-00 |
| The Narada Bhakti Sutras | Ordinary 6-00 Deluxe | 11-00 |
| Narada's Way of Divine Love | | 5-00 |
| The Divine Life | | 5-50 |
| Universal Prayers | Ordinary | 4-00 |
| | Deluxe | 11-00 |
| Avadhuta Gita | Ordinary | 6-00 |
| | Deluxe | 14-00 |
| Stotraratna of Sri Yamunacharya | | 2-75 |
| The Spiritual Heritage of Tyagaraja | Board 12-50 Calico | 14-00 |
| Consolations | | 0-50 |
| Adventures in Religious Life | Ordinary 8-00 Deluxe | 12-00 |
| The Sermon on the Mount According to Vedanta | | 7-00 |
| Gems from the Upanishads | | 2-25 |
| Learn Sanskrit through Stories | | 3-00 |
| Book of Daily Thoughts and Prayers | | 12-00 |
| Religion and National Integration | | 1-00 |

| Title | | Rs. |
|---|---|---|
| Yoga for Beginners | Ordinary | 7-00 |
| | Deluxe | 15-00 |
| Meditation | | 5-00 |
| Concentration & Meditation | | 4-50 |
| Spiritual Life | | 0-20 |
| Srimad Bhagavatam—The Wisdom of God | Board | 7-50 |
| | Deluxe | 12-00 |
| Srimad Ramayana, The Story of The Prince of Ayodhya | | 13-00 |
| Sri Rama to Sri Ramakrishna | Ordinary 7-00 Deluxe | 18-00 |
| Saints of India | Superior | 6-00 |
| Sri Krishna The Pastoral and King Maker | | 2-00 |
| God and Divine incarnations | Board 3-75 Deluxe | 7-00 |
| Life of Sri Ramanuja | Ordinary | 12-00 |
| | Deluxe | 22-00 |
| Spiritual Heritage of India | Ordinary 10-00 Deluxe | 22-00 |
| Sankara Digvijaya | Deluxe | 20-00 |
| The Path of Devotion | | 4-00 |
| The Upanishads | | 9-00 |
| The Master and the Disciple | | 5-50 |
| Thus Spake Sri Ramakrishna | | 0-80 |
| Thus Spake The Holy Mother | | 0-80 |
| Thus Spake Vivekananda | | 1-00 |
| Thus Spake Sri Rama | | 0-80 |
| Thus Spake Sri Krishna | | 0-80 |
| Thus Spake The Buddha | | 0-80 |
| Thus SpakeToe Christ | | 1-00 |
| Thus Spake the Prophet Mohammad | | 0-80 |
| Thus Spake Sri Sankara | | 0-80 |
| Thus Spake Guru Nanak | | 1-00 |
| Thus Spake The Vedas | | 1-00 |
| Thus Spake Zarathushtra | | 0-80 |
| Gopika Gitam | | 1-00 |
| Adityahridayam | | 1-00 |
| Jayadeva's Dasavatara Stotra | | 0-50 |
| Sri Ramakrishna Suprabhatam | | 0-50 |
| Mukundamala | | 0-50 |
| Bhakti Ratnavali | Ordinary | 11-00 |
| | Deluxe | 21-00 |

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி—60 || அக்டோபர் 1980 || இதழ்—10

## பொருளடக்கம்





## ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை - 600 004

### 1980 அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாத நிகழ்ச்சிகள்

**ஸ்ரீ ஸ்ரீ துர்க்கா பூஜை**

15-10-80 புதன் கிழமை : ஸ்ரீ துர்க்கா சஷ்டி
16-10-80 வியாழன் : மகா சப்தமி (மாலை 5-30 மணிக்கு ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாம அர்ச்சனை)
17-10-80 வெள்ளி : மகா அஷ்டமி (இரவு மணி 8-46 முதல் 9-34 வரை சாந்தி பூஜை)
18-10-80 சனிக்கிழமை : மகா நவமி
19-10-80 ஞாயிறு : விஜயதசமி (மாலை வழிபாட்டிற்குப் பிறகு சாந்தி ஜலம் தெளித்தல்)

**விசேஷ தினங்கள்**

23-10-80 வியாழன் : ஸ்ரீ லக்ஷ்மி பூஜை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)
7-11-80 வெள்ளி : தீபாவளி —ஸ்ரீ காளி பூஜை (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)

**தூய அன்னை ஸ்ரீ சாரதா தேவியார் ஜயந்தி விழா**

28-12-80 ஞாயிறு : ஜன்ம திதி : விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன காலை 5 மணி முதல் 11 மணி வரை நடைபெறும். மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7 மணிக்கு 'ஸ்ரீ அன்னையின் வாழ்வும் வாக்கும்' பற்றிய சொற்பொழிவுகள்.

**மற்ற ஜயந்திகள்**

2-10-80 வியாழன் : ஸ்ரீமத் சுவாமி அபேதானந்தஜி ஜயந்தி
19-11-80 புதன் : ஸ்ரீமத் சுவாமி சுபோதானந்தஜி ஜயந்தி

21-11-80 வெள்ளி : ஸ்ரீமத் சுவாமி விஞ்ஞானானந்தஜி ஜயந்தி

16-12-80 செவ்வாய் : ஸ்ரீமத் சுவாமி பிரேமானந்தஜி ஜயந்தி

கிறிஸ்மஸ் : 24-12-80 புதன் மாலை வழிபாட்டிற்குப் பிறகு பைபிள் படித்தலும் சொற்பொழிவும் நடைபெறும்.

சத்சங்கம் : ஞாயிறு தோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (12 அக்டோபர் & 2, 16, 30 நவம்பர் & 14 டிசம்பர்)

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (5, 26 அக்டோபர் & 9, 23 நவம்பர் & 7, 21 டிசம்பர்)

1. ஸ்ரீமத் பாகவதம்—திரு 'அண்ணா' (5 அக்டோபர், 2 நவம்பர், 7 டிசம்பர்)
2. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (12 அக்டோபர், 9 நவம்பர், 14 டிசம்பர்)
3. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (26 அக்டோபர், 16 நவம்பர், 21 டிசம்பர்)
4. ஸ்ரீ ஆஞ்சனேயர்—திரு ஆர். கோதண்டராமன் (23 நவம்பர்)

மாலை 5-35 முதல் 6-30 வரை ஸ்ரீமத் சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத் கீதை என்ற தலைப்பில் அக்டோபர் 19 & 28 டிசம்பர் ஆகிய இரண்டு நாட்களைத் தவிர அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதங்களிலுள்ள ஏனைய எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

1. திங்கள் — ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் – சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் — பக்தியோகம்—சுவாமி கபீரானந்தர்
3. புதன் — ப்ரச்ன உபநிஷதம்—சுவாமி அமலாத்மானந்தர்
4. வியாழன் — விவேக சூடாமணி—திரு 'அண்ணா' சுப்ரமண்யம்
5. வெள்ளி — ஆன்மிக வாழ்க்கை – சுவாமி கமலாத்மானந்தர்
6. சனிக்கிழமை (4 அக்டோபர், 1 நவம்பர், 6 டிசம்பர் மட்டும்) அத்யாத்ம ராமாயணம்— ஜஸ்டிஸ் பி. ராமகிருஷ்ணன், ஐ. சி. எஸ். (ரிடையர்டு)
7. சனிக்கிழமை (11 அக்டோபர், 8 நவம்பர், 13 டிசம்பர் மட்டும்) ஸ்ரீ ஆஞ்சனேயர்— ஆர். கோதண்டராமன்

4, 20 அக்டோபர் & 3, 18 நவம்பர் & 3, 18 டிசம்பர் ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

ஒவ்வொரு மாதத்தின் இரண்டாவது ஞாயிற்றுக் கிழமைகளில் மாலை 5-30 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற தலைப்பில் சுவாமி கீர்த்திதானந்தர் அவர்கள் உரை நிகழ்த்துவார்கள். இடம் : 7, கெல்லீஸ்ரோடு, கீழ்ப்பாக்கம்.

வெள்ளிக்கிழமை தோறும் மாலை 6-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாம பாராயணமும், பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் என்ற தலைப்பில் சொற்பொழிவும் நிகழ்த்துவார்கள். இடம்: 18, 9-ஆவது லேன், சாஸ்திரி நகர்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

— திருமூலர்

| | | |
|---|---|---|
| தொகுதி 60 | ரௌத்திரி ௵ ஐப்பசி ௴ | இதழ் 10 |





नवदुर्गां महाकालीं ब्रह्मविष्णुशिवात्मिकाम् ।
त्रिकालज्ञानसम्पन्नां नमामि भुवनेश्वरीम् ॥

நவதுர்காம் மஹாகாளிம் ப்ரஹ்ம-விஷ்ணு-சிவாத்மிகாம் ।
த்ரிகாலஜ்ஞாநஸம்பந்நாம் நமாமி புவனேச்வரீம் ॥

நவதுர்க்கையும், மகாகாளியும், பிரமன் திருமால் சிவன் ஆகியோருக்கு ஆத்மாவானவளும், முக்காலத்தையும் அறியும் சக்தியான செல்வத்தையுடையவளும், உலகை ஆள்கிறவளுமான புவனேச்வரியை வணங்குகிறேன்.

பூசித்துக் காண்பேனோ
    பூவில் நகைப்பவளே
வாசித்துக் காண்பேனோ
    வாய் மனத்துக் கெட்டாதாய்.
யோசித்துக் காண்பேனோ
    ஓங்கி உலகளந்தவளே
நேசித்துக் கண்டிடவே
    நெஞ்சுருகி நின்றேனே.



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**திங்கட்கிழமை, ஜூன் 4, 1883**

குருதேவர் பகல் உணவை அருந்தியபின் சிறிது நேரம் இளைப்பாறினர். அவர் ஆழ்ந்து உறங்கிவிடவில்லை, கண் மூடிப் படுத்திருந்தார். பிரம்ம சமாஜத்தின் பழைய அங்கத்தினரான மணிலால் மல்லிக் அறைக்குள் புகுந்து, குருதேவரை வணங்கிவிட்டுக் கீழே உட்கார்ந்தார். குருதேவர் அப்போதும் படுக்கைமீது படுத்துக்கொண்டிருந்தார். மணிலால் அவரிடம் இடையிடையே கேள்விகள் கேட்டார்; அதற்கு, குருதேவரும் அரை உறக்கத்தோடு ஒன்றிரண்டு வார்த்தைகள் பதில் கூறினர்.

**மணிலால்:** நித்தியகோபாலின் ஆன்மிக மனநிலையைச் சிவநாத் மிகவும் புகழ்ந்து சொல்கிறர். நித்தியகோபாலின் ஆன்மிக மனநிலை மிகவும் உயர்ந்ததாக இருக்கிறது என்று அவர் சொல்கிறர்.

குருதேவர் இன்னமும் படுத்துக்கொண்டே இருந்தார். தூக்கம் கலையாத நிலையில் அவர், ''ஹஸ்ராவைப் பற்றி எல்லாரும் என்ன சொல்கிறர்கள் ?'' என்று கேட்டார்.

இவ்விதம் கேட்டுவிட்டு, குருதேவர் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தார். அவர் மணிலாலிடம் பவநாத்தின் பக்தியைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்:** ஆகா! பவநாத்தின் ஆன்மிக மனநிலைதான் எவ்வளவு உயர்ந்ததாக இருக்கிறது! பகவானைப் பற்றி அவன் பாடத் தொடங்குகிறனே இல்லையோ, உடனே அவன் கண்களிலிருந்து கண்ணீர் வழிய ஆரம்பித்துவிடுகிறது. ஹரீஷைப் பார்த்ததுமே பவநாதனுக்குத் தெய்விகப் பரவசம் ஏற்பட்டுவிடுகிறது. ஹரீஷ் மிகவும் பாக்கியம் செய்தவன் என்று பவநாத் சொல்கிறன். அவன் ஏன் அவ்விதம் சொல்கிறன் தெரியுமா ? ஹரீஷ் வீட்டைவிட்டு அடிக்கடி இங்கு வந்து என்னுடன் தங்குகிறன் அல்லவா ? அதற்காகத்தான் பவநாத் அப்படிச் சொல்கிறன்.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் (ம—விடம்):** சரி, பக்தி ஏற்படுவதற்குக் காரணமாக இருப்பது எது ? பவநாத்தைப் போன்ற இந்த இளைஞர்களிடமெல்லாம் இந்த அளவுக்கு உயர்ந்த ஆன்மிக எழுச்சி ஏற்பட்டிருப்பதற்கு என்ன காரணம் ?

குருதேவர் அவ்விதம் கேட்டதற்கு, ம— பதில் எதுவும் சொல்லாமல் மௌனமாக இருந்தார்.

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்:** என்ன காரணம் தெரியுமா ? மக்கள் எல்லாரும் பார்ப்பதற்கு ஒரே விதமாகத்தான் இருக்கிறர்கள். ஆனல் சிலருக்குள்ளே 'திரட்டுப்பால்' இருக்கிறது. கொழுக்கட்டையின் உள்ளே உளுத்தம் பருப்பை வைத்திருப்பதற்கும் வாய்ப்பு இருக்கிறது; அல்லது தேங்காய் பூரணம் வைத்திருப்பதற்கும் வாய்ப்பு இருக்கிறது. ஆனல் எல்லாக் கொழுக்கட்டைகளுமே வெளிப்பார்வைக்கு ஒரே மாதிரியாகத்தான் இருக்கும்; எல்லாம் மாவினல் செய்யப்பட்டவையாகவே இருக்கும். இறைவனைக் காண வேண்டும் என்ற தீவிர அருள்தாகம், இறைவனிடம் பிரேமை பக்தி கொண்

டிருப்பது, இவை போன்ற தெய்விக இயல்புகளைப் பெற்றிருப்பதுதான் 'திரட்டுப் பால்' ஆகும்.

குருதேவர், அபயம் அளிக்கும் வகையில் பக்தர்களிடம் பின்வருமாறு பேச ஆரம்பித்தார் :—

**ஸ்ரீ ராமகிருஷ்ணர்** (ம—விடம்) : ஒரு சிலர் "நான் பந்தத்திற்கு உட்பட்ட ஜீவனுக இருந்துகொண்டிருக்கிறேன். நான் ஒரு நாளும் ஞானமும் பக்தியும் அடையப் போவதில்லை" என்று நினைக்கிருர்கள். ஆனுல் ஒருவனுக்குக் குருவின் அருள் கிட்டிவிடுமானுல் அவன் எதற்குமே பயப்பட வேண்டியதில்லை.

ஒரு சமயம் கர்ப்பமாக இருந்த ஒரு பெண் புலி ஓர் ஆட்டு மந்தையைத் தாக்கியது. அந்தப் பெண்புலி ஓர் ஆட்டின்மீது பாய்ந்த போது, அது ஒரு குட்டியை ஈன்றுவிட்டு அந்த இடத்திலேயே இறந்துவிட்டது. அந்தப் புலிக்குட்டி ஆடுகளோடு சேர்ந்து வளர ஆரம்பித்தது. ஆடுகள் புல்லைத் தின்றன ; புலிக்குட்டியும் அவ்விதமே புல்லைத் தின்றது. ஆடுகள் தம் இயல்புப்படி கத்தின ; புலிக்குட்டியும் ஆடுகளைப் போலவே கத்தியது. நாளடைவில் அது மிகவும் பெரிய புலியாக நன்ருக வளர்ந்து விட்டது.

ஒரு நாள் இன்னெரு புலி அதே ஆட்டு மந்தையைத் தாக்க வந்தது. ஆட்டுமந்தையில் சேர்ந்து புல்லைத் தின்றுகொண்டிருந்த புலியைப் பார்த்து, புதிய புலி ஆச்சரியப் பட்டது. உடனே காட்டுப் புலி ஆட்டுப் புலியைத் தொடர்ந்து ஓடி, கடைசியாக அதைப் பிடித்துவிட்டது ; அப்போது புல் தின்று வளர்ந்த புலி, 'மே' என்று கத்த ஆரம்பித்தது. ஆனுல் காட்டுப் புலி ஆட்டு புலியை இழுத்துக்கொண்டு குளத்து நீரின் அருகில் சென்று, "இதோ பார். நீருக்குள் உன் முகத்தைப் பார். என் முகத்தைப் போலவே உன் முகமும் அமைந்திருப்பதை நன்ருகப் பார். இதோ சிறிது இறைச்சி இருக்கிறது. இந்த இறைச்சியை நீ தின்னு" என்று கூறியது. இவ்விதம் சொல்லிக் கொண்டே ஆட்டுப் புலியின் வாய்க்குள் சிறிது இறைச்சியைத் திணித்துவிட்டது. ஆனுல் புல்லைத் தின்று பழகிய புலியோ அந்த இறைச்சியை விழுங்க விரும்பாமல், மறுபடியும் ஆடு போலவே 'மே! மே' என்று கத்த ஆரம்பித்தது. ஆனுல் ஆட்டுப்புலி சிறிது நேரத்தில் மெல்ல இரத்தத்தின் ருசியைக் கண்டது. மேலும் அது இறைச்சியின் சுவையையும் உணர்ந்து வாயில் பலவந்தமாகத் திணிக்கப்பட்டிருந்த இறைச்சியையும் சாப்பிட ஆரம்பித்தது. அப்போது காட்டுப் புலி ஆட்டுப்புலியைப் பார்த்து, "இப்போது நீ தெரிந்துகொண்டாயா ? நான் எதுவோ அதுவேதான் நீயும். உனக்கும் எனக்கும் எந்தவித வேறுபாடும் இல்லை. இனி இப்போது நீயும் என்னுடன் காட்டுக்கு வந்துவிடு" என்று சொல்லி, ஆட்டுப் புலியைத் தன்னுடன் காட்டிற்கு அழைத்து சென்று விட்டது.

ஆகவே, குருவின் அருள் உனக்குக் கிடைத்துவிட்டால், பிறகு உனக்கு எந்த விதப் பயமும் இல்லை. நீ யார் என்பதையும் உனது உண்மை இயல்பு இன்னது என்பதையும் அவரே உனக்கு அறிவிப்பார்.

சீடன் ஒருசிறிது ஞானசாதனம் பழகுவானுனல் குரு அவனுக்கு ஒவ்வொன்றையும் தாமே விளக்குவார். அப்போது அந்த நிலையில் சீடன் எது ஸத் (மெய்ப்பொருள்) என்பதையும் எது அஸத் (பொய்ப்பொருள்) என்பதையும் தானே அறிந்துகொள்கிருன்.

ஒரு செம்படவன் ஒரு நாள் இரவு நேரத்தில் ஒரு தோட்டத்துக் குளத்தில் திருட்டுத்தனமாக மீன் பிடிப்பதற்காக வலை வீசியிருந்தான். இது அந்தத் தோட்டத்தின் சொந்தக்காரனுக்குத் தெரிந்துவிட்டது. அவன் தன் ஆட்களைக்கொண்டு அந்தச் செம்படவன் தப்பி ஓடிவிடாத வகையில், நான்கு பக்கங்களிலும் சுற்றி வளைத்துச் சூழ்ந்துகொண்டான். பிறகு தோட்டச் சொந்தக்காரனின் ஆட்கள் கையில் தீப்பந்தங்களுடன் திருடனைத் தேட ஆரம்பித்தார்கள். இதற்குள் செம்படவன் தன் உடலில் சாம்பலைப் பூசிக் கொண்டு ஒரு மரத்தடியில் ஒரு சாதுவைப் போல உட்கார்ந்து விட்டான்! செம்பட

வனைத் தேட வந்த ஆட்கள் அங்கும் இங்குமாகச் சுற்றியலைந்து நன்ருகத் தேடிப் பார்த்தனர். எவ்வளவு தேடிப் பார்த்தும் திருட்டுச் செம்படவன் எவனையும் அவர்களால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆனல் மரத்தடியில் திருநீறு அணிந்து, தியானம் செய்துகொண்டிருந்த ஒரு சாதுவையே அவர்கள் பார்த்தார்கள். மறுநாள் காலையில், ஒரு பெரிய மகான் அந்தத் தோட்டத்திற்கு வந்து எழுந்தருளியிருக்கிருர் என்ற செய்தி ஊர் முழுவதும் பரவிவிட்டது. ஏராளமான மக்கள் பழங்கள், புஷ்பங்கள், இனிப்பு வகைகள் போன்றவற்றைக் காணிக்கையாக எடுத்துக் கொண்டு அந்தச் சாதுவைத் தரிசிக்க வந்தனர். சாதுவின் முன்னல் நாணயங்களையும் சமர்ப்பித்தனர். இவ்விதம் நிறையப் பணம் சாதுவின் முன்னல் குவிய ஆரம்பித்தது. அப்போது அந்தத் திருட்டுச் செம்படவனின் உள்ளத்தில், "இது என்ன ஆச்சரியமாக இருக்கிறதே! நானே உண்மையான சாதுவே அல்ல. என்ருலும் என்மீது மக்கள் எவ்வளவு பக்தி செலுத்துகிருர்கள்! எனவே நான் உண்மையான சாதுவாகவே ஆகிவிட்டேனுனல் நிச்சயமாக நான் பகவானை அடைவேன். இதில் எந்தவிதச் சந்தேகமும் இல்லை!" என்ற எண்ணம் தோன்றியது.

ஆன்மிக வாழ்க்கைப் போலித்தனமாக மேற்கொண்டதற்கே அந்தச் செம்படவனுக்கு இவ்வளவு ஆன்மிக எழுச்சி ஏற்பட்டு விட்டது! உண்மையாகவே ஆன்மிகச் சாதனைகளைப் பழகினல் அது அளவற்ற பயனைத் தரும் என்பதைச் சொல்ல வேண்டுமா என்ன? உண்மையாகவே ஆன்மிகச் சாதனைகளில் ஈடுபடும்போது எது ஸத் என்பதையும், எது அஸத் என்பதையும் நிச்சயமாக அறிந்துகொள்வீர்கள். அதாவது ஈசுவரனே சத்தியவஸ்து, சம்சாரம் அநித்தியமானது என்பது விளங்கிவிடும்.

இவ்விதம் குருதேவர் சொன்னதைக் கேட்டுக்கொண்டிருந்த பக்தர்களில் ஒருவர், "அப்படியானல் உலகம் அஸத்தா (அநித்தியமா)? செம்படவன் பிற்காலத்தில் உலக வாழ்க்கையைத் துறந்து, உண்மையான சாதுவாகவே ஆகிவிட்டான். ஆனல் உலக வாழ்க்கையில் இருந்து கொண்டிருப்பவர்களின் கதி என்ன ஆகும்? அவர்களும் உலக வாழ்க்கையைத் துறந்துவிட்டுப் போகவேண்டியதுதானு?" என்று தமக்குள் நினைத்துக்கொண்டார்.

காரணம் எதுவும் இல்லாமலே (அஹேதுக கிருபாஸிந்து) பக்தர்களுக்கு அருள்புரியக் கூடியவர் ஸ்ரீ ராமகிருஷ்ணர். கருணைக்கடலாக (தயைகஸிந்து) விளங்கிய அவருக்குப் பக்தர்களின் அந்தரங்கமான எண்ணத்தையும் புகுந்து பார்க்கும் திறமை உண்டாதலின், உடனே அவர் அந்தப் பக்தரின் எண்ணத்தைப் புரிந்துகொண்டார். அத்துடன் அவர் அந்தப் பக்தர் அவ்விதம் நினைத்த மறுகணமே, "ஒரு குமாஸ்தாவை ஏதோ ஒரு குற்றத்திற்காகச் சிறைச்சாலைக்கு அனுப்பி வைத்திருப்பதாக வைத்துக்கொள்வோம். அங்கு அவன் பலவிதத் துன்பங்களுக்கு உட்பட்டு, கைதியாகத்தான் வாழ்ந்துகொண்டிருப்பான் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் அவன் சிறைச்சாலையிலிருந்து விடுதலையாகி வெளியே வந்ததும் என்ன செய்கிருன்? நடுத்தெருவுக்கு வந்து 'ஆகா! ஆகா!' என்று துள்ளிக் குதித்துக் கொண்டு அங்கும் இங்கும் அலைந்து திரிவானு என்ன? மாட்டவே மாட்டான். அவன் மறுபடியும் குமாஸ்தா வேலையைத் தேடிக்கொள்கிருன். முன்பு போலவே வேலையைப் பார்த்துக்கொண்டே இருக்கிருன். குருவருளால் மெய்ஞ்ஞானம் பெற்ற பின்பும், ஒருவன் உலக வாழ்க்கையில் இருந்தபடியே ஜீவன்முக்தனுக நன்கு வாழ முடியும்" என்று கருணை ததும்பக் கூறினர். இவ்விதம் கூறி, பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் குடும்ப வாழ்க்கையில் இருப்பவர்களுக்குத் தைரியம், நம்பிக்கை, உறுதி, அபயம் ஆகியவற்றை அளித்து வந்தார்.





# விஜயதீபம்

## அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும்

**ஒரு சமயம்** விசிஷ்டாத்வைத சம்பிர தாயத்தைச் சேர்ந்த கற்றறிந்த பண்டிதர் ஒருவர் இருந்தார். அவர் மகரிஷி ஒருவ ரிடம் சென்ருர். மக்கள் அந்த மகரிஷி யைப் பிரம்மஞானி என்று மதித்துப் போற்றி வந்தார்கள். அந்த மகான் ஆத்ம சாட்சாத் காரம் பெற்றவராக இருந்தார்.

விசிஷ்டாத்வைத பண்டிதர் அந்த மகானைச் சந்தித்துத் தம்முடன் விவாதத் திற்கு வர வேண்டும் என்று அழைத்தார்.

ஆனல் அந்த மகரிஷியோ மிகவும் அமைதியுடன், "உங்களுக்கு இந்தத் தொந்தரவுகளே வேண்டாம். உங்களுக்கு என்ன வேண்டும் என்று சொல்லுங்கள்; நான் அதைத் தருவதற்குத் தயாராக இருக் கிறேன்" என்று தெரிவித்தார்.

முனிவர் இவ்விதம் சொன்னதோடு மட்டும் நிற்கவில்லை. அவர் ஒரு காகிதத் துண்டை எடுத்து அதில் தமது கைப்பட, "ஸ்ரீ — என்ற இந்த விசிஷ்டாத்வைத பண் டிதரிடம் நான் விவாதத்தில் தோற்று விட்டேன்" என்று எழுதி, விவாதத்திற்கு வந்த பண்டிதரிடம் கொடுத்துவிட்டார்.

அந்தக் காகிதத்தைப் பெற்றுக்கொண்ட விசிஷ்டாத்வைத பண்டிதர் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தார். 'ஈடு இணையற்ற என் பாண்டித்தியத்தை இந்த மகரிஷி தயக்க மின்றி அங்கீகாரம் செய்துகொண்டாரே!' என்று பூரித்துப் போனர். உடனே மகரிஷி கொடுத்த அந்தக் காகிதத்தை அவர் தம் முடைய பையில் வைத்துப் பத்திரப்படுத்திக் கொண்டார். பிறகு மகரிஷியிடம் அவர் விடைபெற்றுச் செல்லும் நேரம் வந்தது.

அப்போது மகரிஷி, "நான் எழுதிக் கொடுத்த காகிதத்தைத் தாங்கள் எந்த முறையில் பயன்படுத்துவதாக இருக்கிறீர்கள் என்பதை நான் தெரிந்துகொள்ளலாமா?" என்று மிகுந்த பணிவுடன் விசிஷ்டாத்வைத பண்டிதரிடம் கேட்டார்.

"நாட்டிலுள்ள எல்லா அத்வைதி களிடமும் நான் இந்தக் காகிதத்தைக் காட்டப் போகிறேன். என் சிறப்பைத்

---

### காலம்

யாரும் எதனையும் உண்டாக்கியவர் அல்ல. யாரும் பிறரைத் தூண்டக்கூடிய திறமை பெற்றவரும் அல்ல. உலகம் தன் இயல்பிலேயே இயங்குகிறது.

காலம் என்பது சுதந்திரமானது. அது எதற்கும் கட்டுப்பட்ட தல்ல. யாரும் அதை கட்டுப்படுத்தவும் முடியாது.

காலத்திற்கு உறவு என்பது இல்லை. வெற்றி, நட்பு, பங்காளி, உறவு என்பதையெல்லாம் அது பார்க்காது. தன்னிச்சையாக இயங்குவது.

— ஆன்ரோர் மொழி

தாங்களே ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள் என்பதை அறிந்து, அந்த அத்வைதிகள் அனைவரும் கூட என் மேன்மையை ஒப்புக் கொண்டு விடுவார்கள். இதில் எனக்குப் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது'' என்று விசிஷ்டாத்வைத பண்டிதர் கூறினர்.

அதற்கு மகரிஷி, ''நான் தங்களிடம் தோற்றுவிட்டதாக ஒப்புக்கொண்டேன் என்பது உண்மைதான். ஆனல் ஒரு விஷயத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். தாங்கள் அத்வைத நூல் களைப் படித்துத் தங்களுடைய அத்வைத பாண்டித்தியத்தைப் பெற்றீர்களா? அல்லது விசிஷ்டாத்வைத நூல்களில் காணப்படும் அத்வைதத்தைக் கண்டிக்கும் பகுதிகளி லிருந்து தங்களுடைய அத்வைத பாண்டித் தியத்தைப் பெற்றீர்களா ? — என்பதை மட்டும் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்'' என்று வினவினர்.

''நான் அத்வைத நூல்களைப் படித்த தில்லை. எப்போதும் விசிஷ்டாத்வைத நூல் களை மட்டும் நான் படிப்பது வழக்கம். விசிஷ்டாத்வைத நூல்களில் அத்வைதக் கருத்துக்களைக் கண்டிக்கும் பல பகுதிகள் இருக்கின்றன. அவற்றைப் படிப்பதன் மூலம் நான் அத்வைதக் கருத்துக்களைத் தெரிந்துகொண்டேன். அதன் மூலமே தேவையான எல்லா விவரங்களையும் தெரிந்துகொண்டு விடலாமே!'' என்ருர் விசிஷ்டாத்வைத பண்டிதர்.

அவர் சொன்னதைக் கேட்ட மகரிஷி, ''தாங்கள் விசிஷ்டாத்வைதநூல்களின் மூலம் அத்வைதக் கருத்துக்களைத் தெரிந்துகொண் டிருப்பீர்கள் என்பதை நான் மறுக்கவில்லை. என்ருலுங்கூட அத்வைதக் கருத்துக்களைத் தெரிவிக்கும் மூல நூல்களைப் படித்தே தாங்கள் அத்வைதத்தைப் பற்றித் தெரிந்து கொண்டீர்களானல், தங்களது அத்வைத அறிவு பின்னும் சிறப்பாக அமையும் அல்லவா? ஏனென்ருல், ஒரு சில அத் வைதிகள் என்னைப் போல அவ்வளவு சுல பத்தில் தங்களுடன் ஒத்துப் போகாதவர் களாகவும் இருக்கக்கூடும். அவர்கள் அத் வைத மூலநூல்களில் இடம் பெற்றிருக்கும்

## மதுர வாணி



மரங்கள் பிறருக்காகவே பழம் தருகின்றன. மேகங்கள் பிறருக்காகவே மழை பொழிகின்றன. கதிரவன் பிறருக்காகவே உதிக்கிருன். காற்றும் பிறருக்காகவே வீசுகிறது. இவ்வுலகில் யாவும் பரோபகாரமே செய்வதைப் பார்த்தும் மனிதன் சுயநலமே பெரிதென்று இருந்தால் அது நீதியாகாதல்லவா ?

பக்தனுக்குத் துன்பம் நேரிட்டால் 'பகவான் என்னைக் கஷ்டப்படுத்துகிருனே, அவனுக்குக் கருணை இல்லையா? என்று நினைக்கமாட்டான். 'எனக்கு ஏற்பட்ட துன்பத்திஞல் பகவான் வருத்தமடைவானே' என்று கவலைப்படுவான்.

பக்தியோகம் மூன்று வகைப்படும். அவை ஸாதன பக்தி, பாவ பக்தி, பிரேம பக்தி என்பனவாகும். மழைக்கு முன் ஏற்படும் புழுக்கத்தைப் போன்றது ஸாதன பக்தி; சிறு தூற்றலைப் போன்றது; பாவ பக்தி பெருமழை போன்றது பிரேமபக்தி.

பிரேமை பக்திக்கு ஆகர்ஷணம் அதிகம். எவ்வளவு தூரத் தில் இருந்தாலும் பிரேமை பக்தர்களின் இதயம் ஒன்ருகவே இருக் கும். சூரியன் எவ்வளவு தூரத்திலிருந்தாலும் தாமரை மலருகிறது; மேகம் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் மயில் ஆடுகிறது; சந்திரன் எவ்வளவு தூரத்திலிருந்தாலும் கடலானது பொங்குகிறது.

குடும்ப வேலைகளுக்கு விரோதமில்லாமல் பக்தி செய்வது லோகதர்மம்; பக்திக்கு விரோதமில்லாமல் குடும்ப வேலைகளைச் செய்வது பாகவத தர்மம்.

சில அத்வைத வாதப் பிரதிவாதங்களை எடுத்துக் கையாண்டு தங்களைக் குழப்பி விடவும் கூடும். தாங்களோ அந்த அத்வைத மூலநூல்களைப் படிக்காதவர். ஆனால் அந்த அத்வைத நூல்களைத் தாங்கள் ஒரு சிறிது படித்துத் தெரிந்துகொண்டீர்களானால், தங்களை எந்த அத்வைதியுமே எதிர்த்து நிற்க இயலாமற் போய்விடும். அத்வைதக் கருத்துகள் இன்னது என்று மூலத்தைப் படித்தே தெரிந்துகொண்டீர்களானால், அவற்றின் குறைபாடுகளைச் சுட்டிக் காட்டுவது தங்களுக்குச் சுலபமாக இருக்கும்" என்றார்.

மகரிஷி சொல்வதில் உண்மை இருப்பதாக விசிஷ்டாத்வைத பண்டிதர் ஒப்புக்கொண்டார். அத்வைதக் கருத்துக்களை அதிகமாகப் புரிந்துகொள்வதற்கு ஏற்ப, மேலும் அவற்றிலுள்ள குறைபாடுகளை எடுத்துக் காட்டி விவாதிக்க அவர் முடிவு செய்தார்.

தமது வீட்டுக்குத் திரும்பிய விசிஷ்டாத்வைத பண்டிதர் முக்கியமான அத்வைத நூல்களைப் படித்துப் புரிந்துகொள்வதில் தீவிரமாக ஈடுபட்டார். சிறிதளவு படித்ததுமே அவருக்குப் பெரிதும் வியப்பு ஏற்பட்டது. காரணம், விசிஷ்டாத்வைதிகள் அத்வைதக் கருத்துக்களில் என்னக் குறையைக் கண்டு, கண்டனம் செய்திருந்தார்களோ, அதையெல்லாம் அத்வைதிகள் தாங்களே ஒரு நிலையில் எடுத்துக்காட்டிக் கண்டித்திருகிறார்கள் என்பதை அவர் கண்டார். 'கயிற்றைப் பாம்பு என்று பார்ப்பது' என்பது போன்ற உதாரணங்களெல்லாம் குறிப்பிட்ட ஏதோ ஓர் உண்மையை உணர்த்துவதற்காக அத்வைதிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அந்த உண்மை நிரூபிக்கப்பட்டதும் அவை நிராகரிக்கப் பட்டிருப்பதையும் அவர் கண்டார். இந்த உண்மையை உள்ளது உள்ளபடி புரிந்து கொள்ளாமல் விசிஷ்டாத்வைதிகள் அத்வைத கண்டனத்தில் இறங்கியிருந்ததை அவர் கவனித்தார்.

இவ்விதம் அத்வைத நூல்களைப் படிக்கப் படிக்க, விசிஷ்டாத்வைத பண்டிதரின் ஊக்கம் அதிகரித்துக்கொண்டே போயிற்று. அவர் அத்வைத நூல்களை மேலும் மேலும் ஆழ்ந்து படித்தார். இந்த முயற்சியில் ஏறத்தாழ இரண்டு ஆண்டுகள் கழிந்தன.

அதன் பிறகு அந்தப் பண்டிதர் தமது வழக்கமான வாதப் பிரதிவாத திக்விஜயத்திற்கு மீண்டும் புறப்படவே இல்லை.

இது மகரிஷிக்குத் தெரிய வந்ததும் அவர் ஒரு நாள், "தாங்கள் ஏன் விவாதிப்பதற்குத் திக்விஜயமாகப் புறப்படவில்லை?" என்று விசிஷ்டாத்வைத பண்டிதரைக் கேட்டார்.

அதற்கு அந்தப் பண்டிதர், "சச்சரவுகளில் ஈடுபடுவதற்கு இடமே இல்லை என்பதை நான் பார்க்கிறேன்" என்று பதில் கூறினார்.

* * *

மதத்தின் பெயரால் நடைபெறும் விவாதங்கள், சண்டைச் சச்சரவுகள், கருத்து வேற்றுமைகள் ஆகியவை உண்மையில் பொருளற்றவையே ஆகும். ஏனென்றால், எந்த ஒரு சம்பிரதாயத்தையும் சேர்ந்தவர் மற்றொரு சம்பிரதாயத்தைச் சேர்ந்தவரைத் தாழ்வாகக் கருதவும் பேசவும் முற்படுவதற்கு முக்கியக் காரணம், அந்த மற்றொருவருடைய சமயக் கருத்துக்களை உண்மையில் புரிந்துகொள்ளாததே ஆகும்.

எந்த ஒரு தத்துவத்தையும் நேர்முகமாகத் தெரிந்துகொள்வதுதான் சிறந்தது; இரண்டாம் பட்சமாகப் பெறப்படும் அறிவு விவரங்களால் உண்மையை உள்ளது உள்ள படியே புரிந்துகொள்ள இயலாது என்பதை உணர்த்துவதுதான் மேலே கூறிய கதையின் நோக்கமாகும். மற்றப்படி ஒரு தத்துவ தரிசனத்தைவிட மற்றொரு தத்துவதரிசனம் உயர்ந்தது என்பதை நிலைநாட்டுவது இந்தக் கதையின் நோக்கமல்ல.

ஏனென்றால், மனப்பூர்வமாகப் பின்பற்றப் பட்டால் இரண்டு தத்துவங்களும் ஒரே இலட்சியத்திற்கு அழைத்துச் செல்லக் கூடியவையே ஆகும்.





# தேவி வழிபாடு

'அண்ணா' சுப்ரமண்யம்

எந்தப் பரம்பொருள் உண்மை-அறிவு-இன்ப வடிவமாய், ஆதியந்த மற்றதாய் உள்ளதோ அதுவே சக்தி எனப்படும். அவன் என்பதுவுமின்றி, அது என்பதுமின்றி இருப்பினும், பெரும்பாலும் சக்தி பெண் வடிவிலேயே போற்றப்பெறுகிறது.

சக்தி எந்த எந்த உருவங்களை எடுக்கிருளோ அந்த அந்த உருவங்களைத் தன்னுடையதாய்க் கொண்டு சக்திமான் என்றும், பதி என்றும் போற்றப்பெறுவதாய், நித்தியமாய், நிர்மலமாய், நிஷ்களமாய், நிராமயமாய், நிறைவாய், சக்தியின் மூலமே அறிவுக்கு விளங்குவதாய் உள்ளது எதுவோ அது சிவம். எது சிவமோ அதுவேதான் சக்தி.

"மணியும் அதன் ஒளியும் போல, சூரியனும் அதன் பிரபையும் போல, பூவும் அதன் பொலிவும் போல, நிர்க்குணமான பரம்பொருளே சகுணமாயும் உள்ளது. பிரம்மமாக இருக்கும் பொருளே சக்தியாயும் உள்ளது. கிரியையற்றதாகக் கருதும்போது அது பிரம்மம் அல்லது சிவம் எனப்படும். படைத்துக் காத்து அழிக்கும்போது அது சக்தி எனப்படுகிறது" என்று கூறுகிருர் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

சிவம் 'சிவனே என்று' கேவலமாக இருக்கும்போது அது ஒன்றும் செய்யாது ; சக்தி என்னும்போது எல்லாவற்றையும் செய்யும்.

"சிவமெனும் பொருளும் ஆதிசக்தியோடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம் ;
இவள் பிரிந்திடின் இயங்குதற்குமரிது
அரிதெனு மறை இரைக்குமால்"

என்று ஸௌந்தர்யலஹரீ கூறுகிறது.

சிவம் என்றும் சக்தி என்றும் சொல்லளவிலே வேற்றுமையே தவிரப் பொருள் வேற்றுமை இல்லை. ஆதிசக்தியின் ஆவிர்ப்பாவத்தினுல்தான் சுத்தசிவத்திற்கு ஸ்வரூப ஆனந்தானுபவம் உண்டாகிறது. ஆதிசக்தியாயிருக்கிற சித்சக்தியிலிருந்து மாயாசக்தி அல்லது மூடசக்தி உதிக்கிறது இவளே பராசக்தி எனப்படுபவள். பராசக்தியிடமிருந்து இச்சா ஞானக் கிரியா சக்திகளாம் பிரம்மா விஷ்ணு ருத்திரர்கள் தோன்றுகின்றனர். அவர்களின் மூலம் பராசக்தி சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற பிரபஞ்ச லீலையை நடத்துகிருள்.

நிர்மாஸி ஸம்ஹரஸி நிர்வஹஸி த்ரிலோகீம்
வ்ருத்தாந்த — மேதமபி வேத்தி
ந வா மஹேச : |
தஸ்யாத்மனஸ்து கிரிஜே தவ ஸாஹசர்யாத்
ஜாத : ச்ருதிஷ்வபி ஜகஜ்ஜனகத்வ—
வாத : ||

பார்வதி ! நீயே மூவுலகையும் உண்டாக்குகிருய், ஆளுகிருய். அழிக்கிருய். இந்த விருத்தாந்தத்தைக்கூடச் சிவன் அறிவானே அறியமாட்டானே தெரியவில்லை. ஆனல் அவனுடன் நீ கூடியிருப்பதனல் வேதம் அவனைப் பிதா என்று கூறுகிறது (ஆனந்தஸாகரஸ்த்வம் — நீலகண்ட தீட்சிதர்.)

உபநிஷதங்களில் உபதேசிக்கப்படும் உண்மை பிரம்மவித்தை எனப்படும். அதை அறிந்து அனுபவத்தில் கொண்டுவர வழி காட்டுவது ஸ்ரீ வித்யை அல்லது சாக்த தரிசனம்.

பிரம்மம் பிந்துவால் குறிக்கப்படும்; சக்தி முக்கோணத்தால் குறிக்கப்படும்; மூன்று காலங்கள், மூன்று அவஸ்தைகள், மூன்று குணங்கள், மூன்று மூர்த்திகள் என்று மூன்று மூன்ருக உள்ளதெல்லாம் சக்தியின் ஸ்வரூபம்.

சக்தி வழிபாட்டு முறையில் மந்திரம், யந்திரம், தந்திரம் என்ற மூன்றையும் முக்கோணத்தின் மூன்று மூலைகளாகக் கருதலாம். மந்திரத்திலுள்ள கருத்தை உருவகப்படுத்திக் காட்டுவது யந்திரம். அது சித்தத்தை நிறுத்துவதற்குப் பயன்படும். பாஹ்ய பூஜையும், மானஸிக பூஜையும், குண்டலினி யோகமும் மற்றச் சாதனங்களும் தந்திரத்தில் அடங்கும்.

ஸ்ரீவித்யையின் கோடிக்கணக்கான மந்திரங்களில் மிக முக்கியமாகக் கொள்ளப்படுவது பஞ்ச தசாக்ஷரீ மந்திரம்; முக்கியமான யந்திரம் ஸ்ரீ சக்கரம்; முக்கியமான தந்திரம் ஐக்கியானுஸந்தானம். மந்திர சித்திக்கு யந்திரமும் தந்திரமும் பக்கத் துணைகள்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் தமது சரீரத்தையே சிறந்த யந்திரமாகக் கருதினர். 'அமீ யந்த்ர, துமீ யந்த்ரீ—நான் யந்த்ரம், நீ யந்த்ரீ' என்று தேவியை நோக்கி அவர் கூறுவார்.

சநாதன தர்மம் அல்லது இந்து மதம் இமயமலை போன்றது. அதில் உதித்துப் பல திசைகளில் பாய்ந்து செல்லும் நதிகள் போன்றவை பல சமயங்கள். நதிகள் புகும் கடல் போன்றது சாக்த தரிசனம். பிரிந்து போன மார்க்கங்கள் ஒன்று சேரும் இடமாக அது விளங்குகிறது.

காணபதம், ஸௌரம், வைஷ்ணவம், சைவம், கௌமாரம் என்ற எல்லா உபாசன மார்க்கங்களும் சாக்தத்தினல் சமரசத் தன்மையை அடைகின்றன. 'அந்த: சாக்தோ பஹி: சைவ: வ்யவஹாரேஷு வைஷ்ணவ :— உள்ளே சாக்தன், வெளியே சைவன், விவகாரத்தில் வைஷ்ணவன்' என்ற மூதுரைப்படி, ஒரே சாதகனுங்கூட மாறுபாடின்றி வெவ்வேறு மார்க்கங்களைச் சமரசப் படுத்திக் கையாளலாம்.

சக்தி வடிவான காயத்ரீ உபாசனையில் இந்தச் சமரசம் அடங்கியிருப்பதைக் காயத்ரியை வழிபடுவோர் அறிவர். மகா பாரதத்தில் அர்ஜுனனை இந்தச் சமரசத்திற்கு உதாரணமாக வியாசர் காட்டுகிருர்.

அர்ஜுனன் சிவனைப் பூஜிப்பவன், உள்ளத்தில் தேவியைப் போற்றுபவன், விவகாரங்களிலெல்லாம் கிருஷ்ணனைத் தோழனுகக் கொண்டவன்.

பாரதப்போருக்கு முன் ஸ்ரீகிருஷ்ணன் துர்க்கா தேவியைப் பிரார்த்திக்கும்படி அர்ஜுனனுக்குக் கூற, 'ஸ்துவானி த்வம் மஹா தேவி விசுத்தேன அந்தராத்மனு' என்று அர்ஜுனன் துதிக்கிருன்.

ஸ்ரீ ஆதிசங்கரர் காட்டிய சாதன மார்க்கத்தில் சூரியன் சக்தி விஷ்ணு கணபதி சிவன் என்ற ஐந்து மூர்த்திகளின் பூஜையடங்கிய பஞ்சாயதன பூஜையும், அவர் ஏற்படுத்திய மடங்களில் ஸ்ரீசக்ரத்தில் விசேஷமாகத் தேவியின் ஆராதனையும், அவர் இயற்றிய நூல்களில் பிரபஞ்சஸாரம், ஸௌந்தர்ய லஹரீ, த்ரிசதீ பாஷ்யம் போன்றவையும் இந்தச் சமரசத்தையே நிலைநாட்டுகின்றன.

நவயுக அவதார புருஷராகிய பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் இந்துமதத்திற்குப் புறம்பான மதங்களையுங்கூட ஏற்று, எம்மதமும் ஜகன்மாதாவுக்குச் சம்மதமே என்பதைத் தமது வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் உலகிற்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

அன்னை பராசக்தியின் அருளால் இந்த சமரச நிலைகிட்டாத வரையில் வேதாந்தமும் சித்தாந்தமும் வெறும் கேள்வியாக மட்டும் தான் இருக்கும். அன்னையை உள்ளன்புடன் வழிபட்டால் 'ஸர்வ — தேவ — தேவீ — ஸ்வரூபிணி'யாகிய அவளே எல்லாத்

தேவதைகளேயும் காட்டியருள்வாள் என்பதற்கும் அந்தக் காலத்தில் போல இந்தக் காலத்திலும் இது அனுபவ சித்தாந்தம் என்பதற்கும் நமது காலத்தில் வாழ்ந்த பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்க்கையே சான்று.

இங்ஙனம் சமரச பாவனையுடன் தேவியை வழிபடுவோருக்கு நிர்க்குண உபாசனையும் சகுண உபாசனையும், கருமமும் பக்தியும், யோகமும் ஞானமும், அத்வைதமும் துவைதமும், இல்லறமும் துறவறமும் எல்லாம் உள்ளத்திற்கு உகந்தவையாகவும், எல்லாமாக இருக்கும் அவளை அடையும் மார்க்கங்களாகவும் காட்சியளிப்பனவாய் விளங்கும்.

அவளே பிரம்மா, அவளே விஷ்ணு, அவளேருத்திரன், அவளேஈசுவரன், அவளே சதாசிவன். (ஸ்ருஷ்டிகர்த்ரீ ப்ரஹ்மரூபா கோப்த்ரீ கோவிந்தரூபிணீ ஸம்ஹாரிணீ ருத்ரரூபா திரோதானகரீச்வரீ| ஸதாசிவானுக்ரஹதா பஞ்சக்ருத்ய பராயணா ॥ —லலிதா ஸஹஸ்ரநாமம்.)

இப்படித் தேவியை வழிபடுவதற்கு எல்லா வர்ணத்தாருக்கும் ஆடவருக்கும் பெண்டிருக்கும் சம உரிமை உண்டு. 'இது வித்தைகளுக்கு அரசு. இரகசியங்களில் சிறந்தது, உத்தமமானது, பரிசுத்தமளிப்பது, நேரில் கண்டு அனுபவிக்கக்கூடியது. தருமத்தினின்றும் பிறழாதது, அனுஷ்டிப்பதற்கு மிகவும் எளியது,என்றும் அழியாதது' என்று பகவத் கீதையில் கண்ணன் யோகத்தைப் பற்றிக் கூறியது ஸ்ரீவித்யைக்கும் முழுதும் பொருந்தும்.

காளிதாசன்,மூககவி, வித்யாரண்யர் போன்ற முற்காலத்துத் தேவி பக்தர்களுடைய மதமும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் போன்ற தற்காலத்துத் தேவி பக்தர்களுடைய மதமும் இதுவே.

சிவபக்தராகிய திருமூலர் திருவாடுதுறையில் தாம் சக்தியை வழிபட்டுப் பூரணத்துவம் எய்தியதாகக் கூறியுள்ளார்.

பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தின் காதி வித்யையை அவர் திருமந்திரத்தின் 1307—ஆம் பாடலில் கூறியுள்ளார்.

சிவத்திற்கு எவ்வளவு பெருமையோ அவ்வளவு சக்திக்கும் உண்டு. சக்தியையும் சிவனையும் ஒன்ருக உள்ளத்தில் தியானித்தால் அஷ்டமா சித்திகளையும் பெறலாம் என்றும் திருமூலர் (திருமந்திரம்—333) கூறுகிருர்.

கிரக பூத பிசாச பீடைகளின் நிவாரண சக்தியும், உடலிலும் மனத்திலுமுள்ள தீராத நோய்களைத் தீர்க்கும் சக்தியும், பலவிதமான சித்திகளும் தேவியை வழிபடுவோருக்குத் தாமே வரினும், சிறந்த பக்தர்கள் சித்திகளைப் பொருட்படுத்த மாட்டார்கள். பக்தியொன்றையே வேண்டி நிற்பார்கள்.

அன்னையின் வழிபாடு, பிராஹ்மீ, மஹேசுவரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலட்சுமி, காளி, தாரா, த்ரிபுரஸுந்தரீ, புவனேசுவரீ, பைரவி, சண்டிகா என்ற பலமூர்த்திகளிலும் இன்னும் எத்தனையோ வடிவங்களிலும் நிகழ்கிறது.

இவற்றுள் சாந்தமான வடிவங்களில் உபாசனை தென்னுட்டில் பிரசித்தம்; கோரமான வடிவங்களில் உபாசனை வடநாட்டில் பிரசித்தம்.

சரஸ்வதியாகவும், லட்சுமியாகவும், துர்க்கையாகவும், மும்மூர்த்தியாகவும் ஒன்ருக உள்ள ராஜராஜேசுவரி என்ற தேவியின் ஆராதனை நவராத்திரிக் காலத்தில் நடைபெறுவதை அனைவரும் அறிவர். சரஸ்வதியாகவும் லட்சுமியாகவும் லலிதையாகவும் ஆராதிப்பதைவிட, துர்க்கையாகவும் சண்டியாகவும் ஆராதிப்பது சற்றுக் கடினம். துர்க்கையின் கோலம் போர்க்கோலம்; அது உலகை நடுங்க வைப்பது. அதன் இரகசியம் ஞானவீரர்களுக்கே விளங்கும்.

அன்னை பராசக்தியின் கோபம் தீயோருக்குக் கொடியதாய்க் காணப்படினும் அடியாருக்கு அபயமளிப்பதாகவே திகழ்கிறது. அவள் அளிக்கும் துன்பமும் மனத்தின் கோணலை நிமிர்த்தவும், குற்றங்களைக் களையவும், பாவக் குவியலைப் பொசுக்கவுமே பயன்படுகிறது. ஆயிரம் யுகங்களாக வளர்ந்த தீமை அவள் கோபத்தில் அரை நொடியில் பட்டுப்போகிறது.

தேவி தென்னுட்டில் கன்னியாகுமரியில் பாலா பரமேசுவரியாகவும், மதுரையில் புத்திரூபிணியான மீனுட்சியாகவும், திருவானைக்காவலில் பராஹந்தாரூபிணியான அகிலாண்டேசுவரியாகவும், காஞ்சியில் ஆத்மஸ்வரூபிணியான காமாட்சியாகவும், புண்ணிய க்ஷேத்திரங்களிலேயே முதன்மை ஸ்தானத்தை வகிக்கும் ஒப்பற்ற காசி மகா க்ஷேத்திரத்தில் விசாலாட்சியாகவும்,இன்னும் எத்தனை எத்தனையோ வடிவங்களில் கோவில் கொண்டு எழுந்தருளி அடியார்களுக்கு என்றென்றும் அருள்புரிகிருள்.



# அறிந்து ஆடும்!

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

தமிழ்நாட்டில் இறைவன் சிறப்பான நடனத்தைச் செய்தருளும் சபைகள் ஐந்து உண்டு. அவற்றைப் பஞ்ச சபைகள் என்று சொல்வார்கள். திருவாலங்காட்டில் இறைவன் ஊர்த்துவ தாண்டவம் புரியும் இரத்தின சபையும், சிதம்பரத்தில் ஆனந்தத் தாண்டவம் செய்தருளும் கனக சபையும், மதுரையில் கால் மாறியாடும் வெள்ளியம்பலமும், திருநெல்வேலியில் நடனமிடும் தாமிர சபையும், திருக்குற்ருலத்தில் திருக்கூத்தாடும் சித்திர சபையும் இருக்கின்றன. இவற்றில் வடக்கே தொண்டைநாட்டில் உள்ள திருவாலங்காடு ஊர்த்துவ தாண்டவத் தலம். அவனுடைய நடனத்தைத் தரிசித்துக் கொண்டு என்றும் காரைக்காலம்மையார் அங்கே இருக்கிருர்.

"கூடுமா றருள்கொ டுத்துக்
குலவுதென் திசையில் என்றும்
நீடுவாழ் பழன மூதூர்
நிலவிய ஆலங் காட்டில்
ஆடுமா நடமும் நீகண்டு
ஆனந்தம் சேர்ந்துஎப் போதும்
பாடுவாய் நம்மை என்ருன்
பரவுவார் பற்ருய் நின்ருன்"

"மடுத்த புனல் வேணியினர்
அம்மைஎன மதுரமொழி
கொடுத்தருளப் பெற்ருரைக்
குலவியதாண் டவத்தில்அவர்
எடுத்தருளும் சேவடிக்கீழ்
என்றும்இருக் கின்ருரை
அடுத்தபெரும் சீர்பரவல்
ஆர்அளவா யினதம்மா!"

(காரைக்காலம்மையார் புராணம், 61, 65)

என்று சேக்கிழார் பாடுவார்.

அவ்வாறு ஊர்த்துவ தாண்டவம் புரிந்தருளும் ஐயனைப் பார்க்கிருர் காரைக்காலம்மையார். அவன் ஆடும் ஆட்டம் உலகத்தையே கிடுகிடுக்க வைக்கிறது. சுழன்றும் வளைந்தும் விளையாடும் குழந்தையைப் பார்த்து அதன் மேனி அலசுமே என்றும், எங்காவது முட்டிக்கொள்ளுமே என்றும் அஞ்சும் அன்னையைப் போல அம்மையார் இப்போது கவலைப்படுகிருர். "சுவாமி, தாங்கள் சிறிது நிதானமாகவே ஆடுங்கள். உங்கள் ஆட்டத்தால் விளையும்விளைவுகளைச் சற்றே திருவுள்ளங் கொண்டு மெல்ல ஆடுங்கள்" என்று சொல்ல வருகிருர்.

"நீங்கள் ஆடும் இந்த அரங்கு உங்கள் திருநடனத்தைத் தாங்காது; ஆகவே மெல்ல ஆடுங்கள்" என்கிருர்.

அடிகள்! அறிந்து ஆடும்;
ஆற்ருது அரங்கு.

விசிறி ஆடினுல் என்ன ஆகும்? அதைச் சொல்கிருர்.

"நீங்கள் உம்முடைய அடிகளைப் பெயர்த்து வேகமாக ஆடினுல் அடியில் உள்ள பாதாள உலகம் நிலைபெயரும். இதனை அறிந்து மெல்லவே ஆடுங்கள்."

அடிபேரின் பாதாளம் பேரும்.

"உம்முடைய திருமுடி அசைந்து பெயர்ந்து ஆடினுல் மேலே உள்ள வானத்தின் உச்சியே தகர்ந்துவிடும். இதை உணர்ந்து ஆடுங்கள்."

**முடிபேரின் மாமுகடு பேரும்.**

"தேவரீர் கைகளில் கடகங்களை அணிந்திருக்கிறீர்கள். எட்டுத் தோள்கள் இருக்கின்றன. அந்த எண்டோளையும் வீசி நின்று ஆடும் பிரான் நீங்கள். கைவளைகள் மேலும் கீழும் மறிந்து ஆடும்படி உங்கள் நடனம் அமைந்தால் பெருமையுடைய திசைகளெல்லாம் பெயர்ந்து மாறிவிடும். ஆகவே இதனை அறிந்து ஆடுங்கள்."

**கடகம்**
**மறிந்து ஆடு கைபேரின்**
**வான்திசைகள் பேரும்.**

"அடியினுல் பாதாளமும், முடியினுல் வான் முகடும், கைகளால் திசைகளும் நிலை பெயர்ந்து விடுமானுல் உலகம் என்னுகும்? இந்த விளைவை எண்ணியும், தேவரீர் ஆடும் இந்த அரங்கு தங்கள் ஆட்டத்தைத் தாங்காமல் குலையும் என்பதையும் நினைந்து, மெல்ல ஆடுங்கள்."

**அடிபேரின் பாதாளம் பேரும்; அடிகள்,**
**முடிபேரின் மாமுகடு பேரும்;— கடகம்**
**மறிந்து ஆடு கைபேரின் வான்திசைகள்**
**பேரும்;**
**அறிந்து ஆடும்; ஆற்ருது அரங்கு.**

சுவாமி, நீங்கள் தாண்டவம் புரியும்போது தங்கள் திருவடி வேகமாகப் பெயர்ந்து சதி மிதித்தால் கீழே உள்ள பாதாள உலகம் நிலைபெயரும்; தேவரீர் திருமுடி பெயர்ந்து வேகமாக ஆடினுல் பெரிய வானத்தின் உச்சியிலே அது முட்டி அந்த வானம் பெயர்ந்து விடும்; வளைகள் மாறி மாறி ஆடும் திருக்கரங்களை வீசி ஆடினுல் பெரிய திசைகளே தம் நிலையிலும் குலைந்து மாறிவிடும்; ஆகவே இவற்றையெல்லாம் அறிந்து நடனம் புரிந்தருள்விர்களாக; இந்தச் சிறிய நடன அரங்கு தேவரீருடைய ஆனந்தத் தாண்டவத்தைத் தாங்காது; நிலை குலைந்து போகும்.

[நடனமிடும்போது திருவடிகளைச் சதிக்கு ஏற்ப மிதித்து ஆடுவார்கள். கால்கள் பெயர்ந்து பெயர்ந்து மிதிக்கும். அவ்வாறு அடிகளைப் பெயர்த்து வைக்கும்போது அவற்றின் ஆற்றலைத் தாங்க மாட்டாமல் பாதாளம் பெயர்ந்து நிலைகுலையுமாம்.

அடிகள்–சுவாமியே; விளி. அடிகளுடைய முடி என்றும் கொள்ளலாம். அப்போது அதனை அடிகள் அடி அடிகள் கை என்று பிறவற்ருேடும் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும்.

தலையை அப்படியும் இப்படியும் பெயர்த்து ஆடுதல் நடனமிடுவோருக்கு இயல்பு. அவ்வாறு ஆடும்போது பெரிய வானத்தின் உச்சி பெயர்ந்துவிடுமாம். மாமுகடு– பெரிய உச்சி; வானம் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கி அகலிருவானமாக இருத்தலின் அதன் உச்சி 'மாமுகடு' ஆயிற்று.

ஆடுபவர்களின் கைகளில் அணிந்த வளையல் குலுங்கி நடனத்துக்குத் தாளம் போடுவது போல மாறி மாறி ஒலிக்கும். அசையும்போது அவற்றிலுள்ள கடகங்கள் மேலும் கீழும் மறிந்து குலுங்கும். அதனுல் பெரிய திசைகளெல்லாம் பெயர்ந்து விடுமாம். மறிந்து–மாறி மாறி அமைந்து. கடகம் ஆடும் கை. வான்–பெருமை. அறிந்து–இந்த விளைவுகளையெல்லாம் திருவுள்ளத்தில் கொண்டு. ஆடும்–ஆடுவிராக. அரங்கு ஆற்ருது–தேவரின் ஆடுவதற்கு நிலைக்களமாகிய அரங்கமே தங்கள் ஆட்டத்தைத் தாங்காது.

'பாதாளம் பேரும்; மாமுகடு பேரும்; திசைகள் பேரும்; அரங்கு ஆற்ருது; இவற்றை அறிந்து அந்த நிலைகுலைவு உண்டாகாமல் ஆடுங்கள்' என்றபடி. அரங்கு; ரங்கம் என்ற ஆரியச் சொல் அரங்கம் என்று தமிழ் வடிவம் பெற்று, அது பின்னும் திரிந்து அரங்கு என்று ஆயிற்று.]

இறைவனுடைய ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்த அதிசயத்தால் பாடியது இது.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 77–ஆம் பாடல் இது.




# பாவத்தால் சேர்ந்த பணம்

சரஸ்வதி

ஓர் ஊரில் இரண்டு சகோதரர் வசித்து வந்தனர். அவர்கள் இருவரும் அந்தணர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அதிகமான படிப்பும் அவர்களுக்கு இல்லை. எனவே வறுமையில் வாடினர். கொடிய வறுமையில் வெறுப்புற்று அவர்கள் வீட்டைவிட்டுப் புறப்பட்டனர். செல்வத்தைத் தேடும் நோக்கத்தோடு கடற்கரைக்கு வந்து சேர்ந்தனர். அது மீனவர்களின் குடியிருப்புப் பகுதி.

சகோதரர் இருவரும் பெரிய தலைப்பாகை, சந்தனப்பொட்டு, புத்தகக்கட்டு ஆகியவற்றுடன் சென்று, மீனவர் மத்தியில் தங்களுடைய சோதிடப் புலமையைச் சரமாரியாகக் காட்டினர். பாவம்! அந்த ஏழை மீனவர் இவர்கள் இருவரையும் சிறந்த சோதிடப் புலிகள் என்று நம்பிக்கொண்டு, தங்கள் வயிற்றையும் வாயையும் கட்டிச் சேர்த்த பணத்தையெல்லாம் இவர்களுக்குக் கொடுத்ததுடன், இவர்களின் வாக்கைத் தெய்வ வாக்காகவும் நம்பத் தலைப்பட்டனர். மந்திரம் என்ன, தந்திரம் என்ன, மாந்திரிகம் என்ன என்று சகோதரர் இருவரும் தடபுடல் செய்து, ஒன்றுமறியாத அப்பாவி மீனவர்களை நன்றாக ஏமாற்றிவிட்டனர்.

கொஞ்ச நாட்களுக்குள்ளாகவே நிரம்பப் பணம் சேர்ந்துவிடவே இருவரும் வீட்டை நோக்கிப் புறப்பட்டனர். கையில் கொஞ்சம் பணம் அதிகமாகவே, அவற்றையெல்லாம் பொற்காசுகளாக மாற்றி, ஒரு பையில் போட்டுக்கொண்டு நடந்தனர்.

வழியில் சென்றபோது பணமூட்டையை ஒருவர் மாற்றி ஒருவர் முறைப்படி எடுத்துச் சென்றனர். அவர்களுடைய மனநிலை மிகவும் விசித்திரமாக இருந்தது. எவனிடம் அந்த மூட்டை இருந்ததோ அவனுடைய மனதில், 'நானே இந்த மொத்தப் பணத்தையும் அடைந்தால் எப்படி இருக்கும்! அதற்காக என் சகோதரனைக் கொன்றுவிட்டால் என்ன?' என்ற எண்ணம் தோன்றியது.

உடன் பிறப்புக்களான அந்தச் சகோதரர்கள் ஒருவரை மற்றவர் மிகவும் உள்ளன்போடு நேசித்தனர். அவர்களின் உள்ளத்தில் இருந்த ஆழ்ந்த அன்புதான் அவர்களின் மனதில் பணம் காரணமாகத் தோன்றிய பாவ எண்ணத்தைச் செயற்படுத்த முடியாமல் தடுத்து வந்தது. வீட்டின் அருகில் வந்தபோது ஒரு வேடிக்கை நடந்தது. பணமுட்டை எவன் கையில் இல்லாமலிருந்ததோ, அவன் பணப்பையை வைத்திருந்தவனிடம், "அண்ணா! என்னை மன்னித்துவிடு. என்னிடம் பணப்பை வந்தபோதெல்லாம் உன்னைக் கொன்றுவிட்டு அந்தப் பணம் முழுவதையும் நானே அபகரித்துக்கொள்ள வேண்டும் என்ற கெட்ட எண்ணமே எனக்கு வந்துகொண்டிருந்தது. எனவே அந்தப் பொல்லாத பணம் எனக்கு வேண்டாம். அதை நீயே வைத்துக் கொள்" என்றான்.

அதைக்கேட்ட அண்ணன் தம்பியை நோக்கி, "தம்பி! என் நிலையும் அதுதான். இப்போதுகூடப் பணப்பை என்னிடம் வந்ததும் உன்னைக் கொல்லவேண்டும் என்ற எண்ணம்தான் தோன்றியது. இப்படி நம் இருவருடைய சகோதரப் பாசத்தையும் அழிக்கத் தூண்டும் இந்தப் பணப்பையைத் தூக்கித் தூர எறிந்துவிடுவோம். அதுதான் சிறந்த வழி" என்று கூறினான்.

வீட்டின் அருகில் குப்பைகளைக் கொட்டும் பெரிய பள்ளம் இருந்தது. அதில்தான் அவர்கள் தினமும் குப்பைகூளங்களைப் போடுவது வழக்கம். இருவருமாகச் சேர்ந்து அந்தப் பணப்பையை அதில் தூக்கி எறிந்துவிட்டு, அதைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் நிம்மதியான மனதுடன் வீட்டிற்குள் நுழைத்தனர். தூக்கிப்போட்ட பணப்பையை எவர் கண்ணிலும் படாமல் மூடவேண்டுமே என்ற எண்ணங் கூட அவர்களுக்குத் தோன்றவில்லை.

அதே நேரத்தில், ஊரிலிருந்து சிறிதுநாள் தங்குவதற்காக வந்திருந்த அவர்களது சகோதரி, வீட்டிற்குள் சமையலுக்குக் காய்கறிகள் நறுக்கி முடித்து, குப்பைகளைத் தூக்கிக் குப்பைமேட்டில் போடுவதற்காக வெளியே சென்றாள். வீட்டின் கொல்லைப்புற வழியாகச் சென்றதனால் சகோதரர் அவளைக் கவனிக்கவில்லை. அங்கே குப்பைமேட்டில் அவள் கண்ட காட்சிதான் என்ன!

ஒரு பை வாய் வழிந்து கிடந்தது. அதிலிருந்து பொற்காசுகள் சிதறிக் கிடந்தன. அவள் குப்பையைப் போட்ட அதே வேகத்தோடு பொற்காசுகளைத் திரட்டி அதே பையில் போட்டுக் கட்டித் தன்

புடைவைத் தலைப்பில் மறைத்து, இடுப்பில் கட்டிக்கொண்டாள். அன்று இரவே அதை ஒருவருக்கும் தெரியாமல் தன் கணவனிடம் சேர்ப்பித்து விடவேண்டும் என்று தீர்மானித்துக்கொண்டு, அவள் வீட்டிற்குள் வரத் திரும்பினாள். அதே சமயம் அவளுடைய அண்ணன் மார் இருவருள் மூத்தவனின் மனைவி ஏதோ வேலையாக வெளியே வந்தவள், தன் நாத்தி குப்பைமேட்டிற்கு அருகே நின்றுகொண்டு ஏதோ செய்வதைக் கவனித்துவிட்டாள்.

எனவே, அது என்ன என்று அறியும் ஆவலில் அவள் அருகே சென்று, "இங்கே என்னம்மா செய்துகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

நாத்தியின் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது. 'அண்ணி பொற் காசுகளைப் பார்த்துவிட்டாளோ ! அப்படியானால் இதை அவள் அண்ணவரிடமும் கூறிவிடுவாளே!' என்ற எண்ணம் அவளுக்குத் தோன்றியது. கையிலோ காய்கறி நறுக்கும் கூரிய கத்தி இருந்தது. சிறிதும் யோசிக் காமல் அவள் டக்கென்று அதைக் கொண்டு அண்ணியின் வயிற்றில் குத்திவிட்டாள்!

குத்தப்பட்ட மனைவியின் அலறலைக் கேட்டு அவளது கணவன் அந்த இடத்திற்கு ஓடோடி வந்தான். அண்ணனைக் கண்டதும் பயத் தால் நடுநடுங்கிய தங்கை ஓட நினைத்தாள் ; முடியவில்லை. கால்கள் நகர மறுத்தன. உடனே தன் அண்ணியின் வயிற்றில் பாய்ச்சிய அதே கத்தியால் ஓங்கித் தன் வயிற்றிலும் குத்திக்கொண்டு கீழே சாய்ந்தாள்.

இந்தக் கோரக்காட்சியைக்கண்ட சகோதரர்களுக்கு ஏற்பட்ட துயரத்தை வர்ணிக்கவே முடியாது. பெரியவன் தம்பியைப் பார்த்து, "தம்பி! பாவத்தால் ஈட்டிய பொருளைத் தூக்கி எறிந்த பிறகும் இத்தனை அனர்த்தங்கள் விளைந்துவிட்டனவே !" என்று கூறிக்கொண்டு, தலையில் கை வைத்தபடி அங்கேயே உட்கார்ந்துவிட்டான்.

பாவத்தால் சேர்க்கும் பணம் எந்த நிமிஷமும் எவருக்கும் ஆபத்தையே உண்டாக்கும். ஆகவே நேரிய வழியில் பொருள் சேர்த்து வாழ்வதே நல்வாழ்வாகும்.



கள் விற்றுக் கலப்பணம் சம்பாதிப்பதை விடக் கர்ப்பூரம் விற்றுக் கால்பணம் சம்பாதிப்பது மேல்.

— ஒரு தமிழ்ப் பழமொழி



# இராமானுஜ வேதாந்தம்

எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்

## நெறி அல்லது உபாயம்

ராமானுஜ நெறியில் மோட்சநிலையை அடைவதற்கு 'நெறி' எனப்படும் உபாயம் பற்றி விளக்கப்படுகிறது.

உலகிலுள்ள மதங்கள் அனைத்திலும் உயிர்கள் முக்தி நிலையாகிய பேரின்பம் அடைவதற்குப் பெருமுயற்சி செய்யும் வழிகள் காட்டப்படுகின்றன. அதே ரீதியில் ஸ்ரீராமானுஜரும் தமது ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முதலான நூல்களில் உயிர்கள் மோட்ச ஆனந்தத்தைத் தாம் அடைவதற்குக் கர்மம், ஞானம், யோகங்களை அங்கமாகக் கொண்ட பக்தியோகத்தைச் சாதனமாக அனுஷ்டிக்க வேண்டும் என்ற வேத சாத்திர உண்மையைக் காட்டினார்.

இத்துடன் நில்லாமல், வேதசாத்திரங்களின் உட்கருத்தாய், உயிர்கள் அனைவரும் உய்வதற்கு வழியான சரணாகதி நெறியையும், கத்யத்ரயம் என்னும் பெயர் பெற்ற மூன்று நூல்களிலும் காட்டினார் ராமானுஜர். ஆழ்வார்கள் காட்டிய இந்தச் சரணாகதி நெறியை, ஸ்ரீரங்கநாதனின் முன்னிலையில் பங்குனி உத்தரச் சேர்த்தியன்று அருளிச்செய்யப்பட்ட இந்த நூல்களில் தாமே தமக்காகவும், தம்மோடு தொடர்பு கொண்டவர்களுக்காகவும் ராமானுஜரே அனுஷ்டித்துக் காட்டினார்.

இதன் கருத்தை விளக்குவோம். தன் உடைமையான ஜீவனை அடைந்து தான் இன்புற வேண்டும் என்பது இறைவனின் விருப்பம். அதற்காக அவன் படைத்தல், அவதரித்தல் முதலிய பல முயற்சிகளை அநாதிகாலமாகச் செய்துகொண்டேயிருக்கிறான்.

ஜீவர்களோ அநாதிகாலமாகச் செய்திருக்கும் பாவங்களின் பயனாகத் தமக்கும் இறைவனுக்கும் இயற்கையாக இருந்து கொண்டிருக்கும் உறவை உணராமல், இறைவன் கொடுத்த சுதந்திரமான அறிவைக்கொண்டு, அற்பமாய், நிலைநில்லாத இந்த உலக இன்பங்களைத் தேடி ஓடுகிறார்கள். பல சமயநெறிகளை காட்டிப் பல பிறவிகளில் இவர்களைப் படிப்படியாகத் திருத்திக் கடைசியில், தன்னை அடைவதே நல்விடு என்று இவர்களை உணர வைக்கிறான். அப்போதும், ஜீவன் அந்த வீட்டை அடைந்து தான் இன்புற விரும்பினால் பல பிறவிகளில் அவனைக் கர்மம், ஞானம், பக்தி யோகங்களை சாதனமாக அனுஷ்டிக்கச் செய்து, கடைசி வரையில் மோட்சத்தில் தான் ஆனந்தமடைய விரும்பித் தன் முயற்சியிலேயே நிலை நின்றால், அந்த சாதனத்தின் பலனாக மோட்ச ஆனந்தத்தை அவனுக்கு அளிக்கிறான்.

சில அறிவாளிகள் பின்வருமாறு சிந்திக்கிறார்கள் :— "இறைவன் நம்மோடு இயற்கையில் உறவுடையவன் ; நம்மை அடைந்து தான் இன்புறுவதற்கு அநாதிகாலமாகப் படாத பாடுபடுகிறான். நாமோ நமக்கு ஆனந்தத்தைப் பெறுவதற்காக அநாதிகாலமாகப் பாடுபட்டு வருகிறோம். உண்மையில் நம்மைப் பெற்று இறைவன் அடையும் ஆனந்தமே நமக்குப் பேறாகும். நாம் நமது ஆனந்தத்திற்காகப் பாடுபட்டு வருவதுதான் இறைவன் நிர்ஹேதுகமாக (காரணம் இல்லா

மலே) அருள் புரிந்து நம்மைத் தன்னை அடைவித்துக்கொள்வதற்கு இதுநாள் வரை தடையாகயிருந்து வருகிறது. ஆகையால் மோட்சத்தில் நாம் ஆனந்தம் அடைவதைக் குறிக்கோளாகக்கொண்டு, இங்கு பாடுபடுவதிலிருந்து நீங்கி, அவனது ஆனந்தத்தையே குறிக்கோளாகக் கொண்டு, அவனையே நம்மை ரட்சிப்பவனுக உறுதிபூண்டு அவனுக்கும், அவனடியார்களுக்குமேயாக வாழ்ந்து வந்தோமானுல், அவன் மோட்சத்தின் பொருட்டு நம்மிடம் எந்த முயற்சியையும் எதிர்பாராமல் (நிர்ஹேதுகமாக) நமக்கு மோட்சத்தை இந்தப் பிறவியின் இறுதியில் அருளி, அவனுடைய உகப்பிற்கு ஏற்ற பேரின்பப் பெருவாழ்வை அருளுவான்'' என்னும் ரீதியிலே அந்த அறிவாளிகளின் சிந்தனை செல்கிறது. அதற்குத் தக்கபடி தாம் மோட்சம் அடைவதற்காகப் பாடுபடுவதின்று நீங்கி, அவனையே அடையத் தக்க பொருளான உபேயமாகவும், அடைவிக்கும் வழியான உபாயமாகவும் கொண்டு, அவனுக்காகவே இந்தப் பிறவியில் வாழ்ந்து, பரமபதத்தில் அவனுக்கே ஆட்செய்யும் பேரின்பப் பெருவாழ்வை, ஒரு சாதனமும், அனுஷ்டானமும் இல்லாமலே நிர்ஹேதுகமாகப் பெறுகிருர்கள்.

இவர்களுக்கு இறைவனே மோட்ச உபாயமாவான். இத்தகையவர்களே ப்ரபன்னர்கள் என்றும், சரணுகதர்கள் என்றும் கூறப்படுகின்றனர்.

இவர்களது வாழ்க்கை முறையான சரணுகதி நெறியே தலைசிறந்த முக்தி வழியாகும் என்று கத்யத்ரயத்தில் காட்டினுர் ராமானுஜர்.

'கண்ணனல்லால் இல்லை கண்டீர் சரண்' என்று நம்மாழ்வார் காட்டிய வழி இதுவே.

இப்படி இறைவனையே உபாயமாகவும் உபேயமாகவும் உறுதி பூண்டு வாழ்க்கை நடத்த இயலாதவர்கள் அத்தகைய உறுதியுடைய ஓர் ஆசார்யனின் அபிமானத்திற்குப் பாத்திரராக வாழ்ந்தால், அதனுலும் பேரின்பப் பெருவாழ்வை மிகவும் எளிதில் பெறலாம் என்றும் ராமானுஜர் உபதேசித்தார். இதுவே மதுரகவி ஆழ்வாரால் 'கண்ணி நுண்சிறுத்தாம்பு' என்னும் திவ்வியப் பிரபந்தத்தில் காட்டப்பெற்ற தொன்மையான வழியாகும். இந்தத் தொன்மையான வழியின்மூலம் பிற்காலத்தில் உள்ளவர்களும் உய்வதற்காக எழுபத்து நான்கு ஆசாரிய பீடங்களாகத் தம் சிஷ்யர்களில் தலைசிறந்தவர்களை நியமித்து, பரம்பரையாக இந்த நெறிகளைப் பரப்பிவர ராமானுஜர் ஏற்பாடு செய்தார்.

உலகிலுள்ள எல்லா உயிர்களும் பேரின்பப் பெருவாழ்வு பெற்று உய்ய வேண்டும் என்னும் பெருங்கருணையாலே, ஆழ்வார்களை அடியொற்றி மிகவும் எளிய வழிகளை எக்காலத்திற்கும் அமைத்துக் கொடுத்த ஸ்ரீ ராமானுஜரை 'காரேய் கருணை இராமானுச' என்று இராமானுச நூற்றந்தாதியில் அமுதனுர் கொண்டாடியது மிகவும் பொருத்தமேயாம்.

## தடை

பேரின்பப் பெருவாழ்வை இந்த உலகிலுள்ள உயிர்கள் அடையத் தடையாக இருப்பவை பற்றிய ராமாநுஜ நெறி இனி விளக்கப்படுகிறது.

இறைவனைப் போலே என்றும் இருக்கும் இவ்வுலகிலுள்ள உயிர்களுக்கு அநாதிகாலமாக உண்டான பிராகிருதமான சரீரங்களோடு உள்ள தொடர்பினுல் தம்மைப் பற்றிய உண்மையறிவு மழுங்கிக் கிடக்கிறது. இதனுல் இவர்கள் உடலையே தாமாகவும், தம்மை சுதந்திரராகவும் எண்ணி விடுகின்றனர். இது அவித்யை அல்லது அஞ்ஞானம் எனப்படும். இந்த அஞ்ஞானத்தினுல் இவர்கள் அற்பமாய் நிலைநில்லாதவையான இவ்வுலக இன்பங்களை விரும்பி, அவற்றைப் பெறுவதற்காக நற்செயல்களையும் தீச்செயல்களையும் செய்து வருகிருர்கள். இறைவன் இவர்களுக்குக் கொடுத்துள்ள சுதந்திர அறிவைக்கொண்டு இவர்கள் செய்யும் நற்செயல்களால் இறைவனுக்கு இவர்களிடம் பிரீதியும், தீய செயல்களால் இவர்களிடம் கோபமும் உண்டாகின்றன. அந்தப் பிரீதியானது புண்ணியம் என்று பெயர் பெறுகிறது. இதனுல், இவர்கள் விரும்பும் இவ்வுலக இன்பங்களை அளிக்

கிறான் இறைவன். தீய செயல்களால் உண்டான கோபம், பாவம் என்று பெயர் பெறுகிறது. இதனால், உயிர்களுக்கு இறைவன் துன்பங்களை அளிக்கிறான்.

ஒவ்வொரு ஜீவனும் அநாதிகாலமாகக் கணக்கற்ற புண்ணிய பாவங்களைச் சேர்த்து வைத்திருக்கிறான். இந்தப் புண்ணிய பாவங்கள் மேன்மேலும் இந்த உலக இன்பங்களை விரும்பச் செய்து, நற்செயல் தீச்செயல்களிலே மூளையச் செய்து, ஒன்று பத்து நூறு ஆயிரமாகப் புண்ணியப் பாவங்களை வளர்த்து வருகின்றன. இதனால் இந்த உலக இன்பங்களிலேயே வாசனை எனப்படும் பழக்கம் உண்டாகிவிடுகிறது. அதனால் அவற்றையே மேலும் மேலும் விரும்ப வைக்கும் ருசியும் உண்டாகிவிடுகிறது.

இப்படிச் சங்கிலித் தொடர் போலே உண்டாகும் உடல்களோடு சம்பந்தம், அஞ்ஞானம், புண்ணிய பாவ கர்மங்கள், வாசனை, ருசி ஆகியவை ஜீவனுக்கு மேலும் மேலும் பல பிறவிகளையும் அவற்றில் பல உடல்களோடு தொடர்பையும் ஏற்படுத்திக் கொண்டே இருக்கின்றன.

அவித்யை எனப்படும் அஞ்ஞானம், கர்மம், வாசனை, ருசி, பிரகிருதி சம்பந்தம் எனப்படும் உடல்களோடு உள்ள தொடர்பு ஆகியவை நம்மைப் பற்றியும், இறைவனைப் பற்றியும் உணரமுடியாதபடி செய்துவிடுகின்றன. இவையே நாம் பேரின்பப் பெருவாழ்வை அநாதிகாலமாகப் பெற முடியாமல் தடுத்து வரும் தடைகள். இவை நாத்திக வாதம் முதலானவை செய்து இறைவனிடத்திலேயே அபசாரப்படும்படியாகவும், அவனடியார்களிடத்திலே அபசாரப் படும்படியாகவும், அவனையும், அவனடியார்களையும் மிகவும் வெறுக்கும்படியாகவும்கூடச் செய்துவிடும். இவை இறைவனை அடைவதற்குப் பெரிய தடைகள்.

இப்படிக் கணக்கற்ற தடைகள் இருந்த போதிலும் இறைவன் தான் செய்யும் முயற்சிகளாலே தற்செயலாக இவர்களுக்கு நேரிடும் புண்ணியங்களை ஒன்று பத்து நூறாயிரமாக வளரச்செய்து, புண்ணியங்களாலே பாவம் குறையப் பெற்றவர்களுக்குத் தன்னை உணர வைக்கிறான். அவனை உணர்ந்து முற்கூறிய வழிகளாலே ஒருசில ஜீவர்கள் முற்கூறிய தடைகள் அடியோடு நீங்கப்பெற்று, தாம் விரும்பிய முக்திநிலையை அடைகிறார்கள் என்கிறது ராமானுஜ நெறி.

## முடிவுரை

ஸ்ரீராமானுஜர் அருளிய நூல்கள் ஒன்பது. வேதவியாசர் அருளிய பிரம்மஸூத்திரத்திற்கு வியாக்கியானமாக அமைந்தவை ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தசாரம் என்னும் மூன்று நூல்கள். உபநிஷத் வாக்கியங்களை அலசி ஆராய்ந்து, உபநிஷதங்களின் கருத்தைத் தெளிவுபடுத்துவது வேதார்த்த ஸங்க்ரஹம் என்ற நூல். கண்ணன் அருளிய கீதைக்கு உரையாக அமைந்தது கீதாபாஷ்யம். சரணாகதி நெறியை விளக்குபவை கத்யதிரயம் என்ற மூன்று நூல்கள். சர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனுக்கு ஆராதனம் செய்யும் முறையை விளக்குவது நித்யக்ரந்தம் என்ற நூல். நவரத்தினங்கள் போன்ற இந்த ஒன்பது நூல்களும் வடமொழியில் அமைந்தவை.

ஸ்ரீராமானுஜருடைய பரம்பரையில் ஓரிரு நூற்றாண்டுகளுக்குள் வந்த பல மகா ஆசாரியர்கள் திவ்யப் பிரபந்தங்களுக்குத் தாம் அருளிய ஈடு முதலான வியாக்கியானங்களில் ஸ்ரீராமானுஜர் அந்தப் பிரபந்தப் பாசுரங்களுக்குக் காட்டிய விளக்கங்களை ஆங்காங்கு அழகிய தமிழில் பொறித்து வைத்திருக்கிறார்கள். இவை அனைத்தையும் கொண்டு ராமானுஜர் காட்டிய நெறி இங்கு சுருக்கமாக விளக்கப்பட்டது. இவற்றிலிருந்து ராமானுஜர் நிலைநாட்டிய விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ நெறி வேதகாலம் முதல் பாரத நாட்டிலும், சங்ககாலம் முதல் அதன் பகுதியான தமிழ்நாட்டிலும் நிலவி வந்த இருமொழி ஒருமைப்பாட்டு நெறியே என்று உணரலாம்.

[ முற்றிற்று ]





# உபதேசசாரம்

(பகவான் ஸ்ரீ ரமணர் அருளியது)

1. படைத்தவனுடைய ஆணையினால் வினையின் பலன் கொடுக்கப்படுகிறது. வினை என்பது ஜடப்பொருள். அது பரம் பொருளாகிய மோட்சத்தைக் கொடுக்க இயலாது.

2. பிறப்பு இறப்பு என்ற சமுத்திரத்தில் விழுந்ததற்குக் காரணம், நாம் செய்யும் வினைகளின் பலன்தான். வினைப்பயன் நிலையானதல்ல. அதுமட்டுமல்ல; இது மோட்சத்திற்கு இடையூறாகவும் இருக்கிறது.

3. பலன்மீது பற்று இல்லாமல் ஈசுவரனுக்கு அர்ப்பித்த காரியம் சித்தத்தைத் தூய்மை செய்கிறது. இவ்விதம் கைக்கொள்ளும் காரியம் முக்திக்கு உறுதுணையாக இருக்கிறது.

[தூய்மை என்பது இங்கு சாந்தமான மனதைக் குறிக்கிறது. அத்தகைய சாந்தமான மனதைக் கொண்டு தியானத்தின் மூலம் இறைவனைப் பற்ற வேண்டும்.]

4. உடல், வாக்கு, மனம் இவற்றால் மாந்தர் செய்யும் பூஜை, ஜபம், தியானம் என்ற கிரம முறையே சிறந்தது.

5. உலகப் பொருள்கள் அனைத்திலும் இறைவனைக் காண்பது சிறந்த சேவை. இதுதான் அஷ்டமூர்த்தியான கடவுளைப் பூஜை செய்வது. அஷ்டமூர்த்திகளாவன: 1. ஆகாயம், 2. வாயு, 3. நெருப்பு, 4. நீர், 5. நிலம், 6. சூரியன், 7. சந்திரன், 8. மனிதன்.

6. கடவுளின் திருநாமத்தை உரக்கச் சொல்லுவதும் மெல்லச் சொல்லுவதும் என்ற முறையைவிட, சித்தத்திற்குள்ளேயே சொல்லுவதுதான் உயர்ந்த தியானமாகும்.

7. தைலதாரை போலத் தொடர்ந்து தியானம் செய்வது, விட்டுவிட்டுத் தியானம் செய்வதைவிட உயர்ந்தது.

8. 'இறைவன் வேறு, நான் வேறு' என்ற பாவனையைவிட, 'அவனே நான்' என்ற பாவனையே உயர்ந்தது.

9. அவன் வேறு நான் வேறு என்ற பாவனை இல்லாதது (அவனே நான் என்பது), அவன் வேறு நான் வேறு என்ற பக்தியைக் காட்டிலும் உயர்ந்தது.

10. மனதைச் சத்தியப் பொருளாகிய இறைவனிடம் நிறுத்தும் காரியம்தான் பக்தி யோகம், கர்மயோகம், ஞானயோகம் மூலமாக நடைபெறுகிறது.

11. பறக்கும் பறவைகளை வலையின் மூலமாகப் பிடிப்பது போன்று, மனதைச் சுவாசத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகப் பிடித்து நிறுத்த முடியும்.

12. சக்தியாகிய மரத்தில் மனதும் சுவாசமும் இரண்டு கிளைகள்.

13 அடக்கப்பட்ட மனம் (லயித்த மனம்) திரும்பவும் வரும். அழிக்கப்பட்ட மனம் திரும்பவும் வராது.

14. சுவாசத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலம் மனம் அடக்கப்படுகிறது. ஒரே சிந்தனையினால் மனம் அழிக்கப்படுகிறது

15. மனதை அழித்துக்கொண்ட ஞானிக்குச் செய்ய வேண்டியது என்ன

இருக்கிறது? ஒன்றுமில்லை. ஏனென்றால், தான் நிறைவுள்ளவன் என்ற உண்மையை அவன் தெரிந்துகொள்கிறான்.

16. நம்முடைய மனம்தான் பார்க்கப் படுகிற உலகம். மனதினுடைய உண்மைத் தர்சனம்தான், சத்தியப்பொருளின் தர்சனம்.

17. 'மனது என்பது என்ன?' என்று ஆராயும்போது, 'மனம் என்று ஒன்று இல்லை' என்பது தெரியவரும். இதுதான் நேரான வழி.

18. எண்ணங்கள் அத்தனையும், 'நான்' என்ற எண்ணத்தைச் சார்ந்தே இருக்கின்றன. மனது என்பது எண்ணங்களின் ஓட்டம். 'நான்' என்பது மனது என்று அறிந்துகொள்.

19. இந்த 'நான்' எங்கே உதிக்கிறது என்று ஆராயும்போது, 'நான்' என்பது இல்லாமற் போய்விடுகிறது.

20. இந்த 'நான்' என்பது அழிந்தபிறகு அது அழிந்த இடத்திலிருந்து 'நான், நான்' என்று ஒன்று வெளிப்படுகிறது. இதுதான் பரிபூரணமான அந்தப் பரம்பொருள்.

21. 'இது' 'நான்' என்ற சொற்கள் இந்தப் பரிபூரணமான பரம்பொருளாகிய 'நான்' என்பதைச் சார்ந்து இருக்கிறது. இந்தப் பரம்பொருள், இப்போது இருக்கும் 'நான்' போனபிறகும் அழியாதிருக்கிறது.

22. தேகம், புலன்கள், பிராணன், புத்தி, அறியாமை இவை யாவும் பொய்யானவை. 'நான்' என்பது இவையல்ல. 'நான்' என்பது அந்தச் சத்தியப்பொருள்.

23. நான் என்பது சத்தியப்பொருள். இது தான் உயிர்ப்பொருள். ஆகையால் உயிர்ப் பொருளும் சத்தியப்பொருளும் வேறு வேறு அல்ல.

24. ஈசனுக்கும் ஜீவனுக்கும் இடையி லுள்ள வேற்றுமை, வேடத்தில்தான் இருக் கிறது. உண்மையில் ஒரே பொருள்தான் இரண்டு வேடங்களையும் ஏற்றுள்ளது.

*தீமை செய்தோருக்குத் தீமை செய் வதுதான் உலக வழக்கம். ஆனால் தீமை செய்தால் நன்மை செய்வது உத்தமர் வழக்கம்.*

—குருநானக்

O O O

[விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்றும் ஜீவன் ஏற்றிருக்கும் வேடமாகும்.]

25. வேடத்தைக் கலைத்தபிறகு நம் முடைய சுய உருவத்தைப் பார்க்கிறோம். இந்தத் தரிசனம்தான் ஈசுவர தரிசனம்.

[மனதைக் கடந்தால்தான் வேடத்தைக் கலைக்க முடியும். ஆகவே மனம் இல்லாத நிலையை அடையவேண்டும்.]

26. நம்முடைய சுய உருவ நிலையை அடைவதுதான் நம்முடைய சுய உருவ தரிசனம். இந்தச் சுய உருவ தரிசனத்தில் பார்க்கப்படுகிற பொருள், பார்க்கிறவன் ஆகிய இரண்டும் வேறு வேறு அல்ல; அவை இரண்டும் ஒன்று.

27. அறிவுப் பொருளாகிய 'நான்', அறிவு, அறியாமை என்ற இரண்டும் இல்லாதது. 'நான்' என்பது இப்படிப்பட்ட தன்மையாக இருக்கும்போது அறியவேண்டியது என்ன இருக்கிறது?

28. நம்முடைய சுய உருவ தரிசனத்தின் போது நம்முடைய சுய உருவம் என்ன என்று பார்த்தால் நாம் எப்போதும் மாறாமல் இருக்கக்கூடிய ஒன்று என்பது தெரிய வரும். அதுமட்டுமல்ல, பரிபூரணமான ஆனந்த உருவமாகவும் அறிவுப் பொருளாகவும் இருப்பது தெரியவரும்.

29. 'நான்' என்பது பந்தத்தையும் முக்தி யையும் கடந்தது. நிலையான ஆனந்த உருவம். இதை அறிந்தால் ஜீவன் உயிரோடு இருக்கும்போது, கடவுளாகிறான்.

30. 'நான் யார்?' என்று விசாரணை செய்வதுதான் உயர்ந்த தவம்.

தொகுப்பு: டி. ராமலிங்கம்



# மனமும் மன அடக்கமும்

சுவாமி விஞ்ஞானனந்தர்

உலகம் முழுவதற்கும் நன்மை ஏற்பட வேண்டும் என்ற எண்ணத்தை உன் நெஞ்சில் போற்றி வளர். அன்ருடம் பிரார்த்தனையில் உலக மக்களெல்லாம் நன்ருக வாழ வேண்டும் என்னும் வேண்டுதலையும் சேர்த்துக்கொள். 'எவையெல்லாம் நன்மையோ அவையெல்லாம் இந்த உலகத்திற்கும் அண்ட சராசரங்களுக்கும் கிடைப்பதாக!' என்னும் நல்ல சிந்தனையை எப்போதும் உன் நெஞ்சில் உன் உயிரோட்டத்தோடு கலந்து இருக்கும்படி பார்த்துக்கொள்.

நீ எப்படி சிந்திக்கிருயோ அப்படியே செயற்படுகிருய். அன்புமயமான எண்ணங்கள் உன் உள்ளத்தை விரிவுபடுத்தத் துணை செய்கிறது. அது போலவே கோபம், பொருமை பற்றிய சிந்தனைகள் உன் இதயத்தைச் சுருக்கி, அதைத் தூள்தூளாக உடைத்துவிடுகின்றன.

உன் சிந்தனை தூய்மையானதாக மாருத வரை நீ கடவுளைக் காணவோ, அவரை உணரவோ முடியாது. உன் சிந்தனையைப் பற்றி எப்போதும் எச்சரிக்கையாக இரு. ஏதாவது ஒரு கெட்ட சிந்தனை மனதில் தோன்றினுலும், அது உடலில் உள்ள இரத்தம் முழுவதையும் கெடுத்துவிடும்.

தீய சிந்தனைகளுக்கு எப்போதும் இடம் கொடுத்துவிடாதே. உன்னை அறியாமல் அவை மனதிற்குள் நுழைந்ததும் உடனே (பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின்) பெயரைத் தணியாத ஆர்வத்தோடும் வேகத்தோடும் ஜபம் செய். உடனே அவை உன்னை விட்டு நீங்கிவிடும்.

ஒருவர் தமது ஆசை, கோபம் முதலியவற்றைக் கட்டுபடுத்தி வைக்கவில்லையென்ருல் கடவுளின் அருகே செல்வதுகூட அவருக்கு முடியாமற் போய்விடும். ஒரு மனிதன் நியாயமானவனுக, தூய்மையானவனுக, சுயநலமில்லாதவனுக இருக்க வேண்டும். இவற்றுக்கு மேலாகக் கடவுளின் வேலைக்காரனுகத் தன் வாழ்க்கை நடத்துபவனுகவும், என்ன பலன் கிடைக்கும் என்று யோசிக்காமல் மக்களுக்குச் சேவை செய்பவனுகவும் இருக்க வேண்டும். சத்தியத்தில் சிறிதும் வழுவாமல், யாரிடத்திலும் எந்தவிதக் கெட்ட நினைப்பும் இல்லாமல் உண்மையில் ஆழ்ந்த பற்றுள்ளவனுக இருந்தால் நீ எத்தகைய வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தாலும் அன்னை பராசக்தி உன்னை வழிநடத்தி உன் பாதையை நேராக அமைத்துத் தருவாள்.

நீ உன் ஆசைகளை அடக்கிக்கொண்டு, கடவுள் உலகில் எல்லா இடத்திலும் இருக்கிருர் என்ற உண்மையை உறுதியாகப் பின்பற்றி நடக்க வேண்டும். கடவுள் நமக்கு உள்ளும் வெளியும் இருந்துகொண்டு, "பயப்படாதே! என்னிடமிருந்து நீ ஓடி விடமுடியாது. நீ என்னிடத்திலேயே எப்போதும் இருக்கவேண்டியவன். ஆனுல் என்னைவிட்டுக் கொஞ்ச நேரம் கீழே இறங்கி விளையாட விரும்புகிருய். நல்லது; போய் விளையாடு. விளையாட்டு முடிந்ததும் உன் இதயத்திற்குள்ளேயே நான் இருப்பதை நீ கண்டுகொள்வாய். உன் மனதிலிருக்கும் ஆசைகளை எந்த விநாடி நீ அழித்து விடுகிருயோ அந்த விநாடி ஒளிமயமான ஆனந்த

வடிவாக என்னை உனக்குள்ளேயே நீ அடைவாய்'' என்று நம்மிடம் சொல்லிக் கொண்டே இருக்கிறார். கடவுள் எப்பொழுதும் நம்முடன் இருக்கிறார். எல்லாவற்றிலும் அவர் தோற்றமளிக்கிறார். ஆனால் ஆசைகளால் நாம் மூடப்பட்டிருந்தால் எப்படி அவர் வடிவை நாம் காண முடியும்?

தூய்மைமயமாக இருப்பவர்களைப் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம்மை மிக அதிகமாக காணும்படிச் செய்கிறார்.

நீ அன்னை பராசக்தியிடம் உன் மனதைத் தூய்மைமயமாக்கும்படி பிரார்த்தனை செய்ய வேண்டும். அவள் உன்னுடைய எல்லாத் துன்பங்களையும் தீர்த்து விடுவாள். உன் இதயத்தைத் தூய்மைப்படுத்திக்கொள். நாளடைவில் எல்லாம் சரியாகிவிடும். தூய்மையான இதயத்தை நீ பெற்று விடுவாயானால், ஆன்மிக இன்பத்தின் சுவை உனக்குத் தெரிய ஆரம்பிக்கும். அந்த இன்பம் ஈடுஇணையற்ற இன்பமாகும். மன ஒருமைப்பட்ட, மலை போன்ற அந்த இன்பத்தோடு ஒப்பிடும்போது உலக இன்பங்கள் யாவும் தூசைவிடக் கேவலமானதாகும். ஒருமுறை அந்த இன்பத்தை அனுபவித்தவர்கள் அதன்பிறகு உலக இன்பங்களைப் பற்றி நினைக்கவே மாட்டார்கள். யார் ஆசைகளை அடக்குகிறார்களோ அவர்கள் இந்த இன்பத்தை நிச்சயம் அடையலாம். அப்போது அவர் கடவுளை நோக்கிச் சென்று கொண்டிருப்பதை அவரே உணரமுடியும்.

ஆசைகளை எல்லாம் அடக்கிவிட்டவர்களே சுதந்திர மனிதர்கள். ஆனால் அந்த ஆசைகளுக்கு அடிமையாகிவிட்டவர்கள் சங்கிலிகளால் கட்டிப் பிணைக்கப்பட்டவர்கள். ஒழுக்கத்தை இழந்துவிட்டவன் உண்மையில் பிணமாகிவிடுகிறான். இந்த ஒழுக்கச் சாவோடு அவனுடைய உடல் சாவை நினைத்துப் பார்க்கும்போது அந்தச் சாவு மிக மிகச் சாதாரணமானதாகும். வாழ்வின் நங்கூரமான ஒழுக்கத்தை இழந்தால் எதிர்காலத்தில் வருகிற எத்தனை எத்தனையோ பிறவிகளில் அவன் துயருற்று நாசமாக வேண்டும்.

மனம் பலவேறுபட்ட சிந்தனைகளால் தாக்கப்படுவதால் எல்லோருமே தங்களால் கடவுளின்மீது மனதைச் செலுத்த முடியவில்லை என்று குறைப்பட்டுக் கொள்கிறார்கள். இவர்கள் ஏன் மனதினுள் வரக்கூடாது என்று அந்தப் பலவகையான நினைப்புக்களுக்குத் தடுப்புப் பலகை வைக்கக்கூடாது? அவை உள்ளே நுழைந்துவிடாமல் ஏன் தடுக்கக்கூடாது?

மனம் மோசமான சிந்தனைகளால் தாக்கப்படும்பொழுது அது பூனையின் கையில் சிக்கிய எலியைப்போல் வெறுப்பும் சோர்வும் அடைந்து செயலற்றும் நின்றுவிடுகிறது. ஆனால் ஏன் அத்தகைய துன்பங்களை நீ உண்டாக்கிக்கொள்கிறாய்? அத்தகைய சூழ்நிலைகளில் நீ உனக்குள் இருக்கும் சிங்கம் போன்ற வலிமையை வெளியே வரவழை. உன்னைச் சூழ்ந்திருக்கும் தீய நினைவுகளைத் துரத்தி விரட்டு. மனதை அடக்க முடியவில்லை என்று நீ சொல்லுவது மன்னிப்பிற்கான காரணமாகிவிடாது. நீ ஏன் அந்த எண்ணங்களை உன் மனதைப் பாழ்படுத்தும்படி அனுமதித்தாய்?

கடவுள் எப்போதும் நீ அவருக்கு வேலைக்காரனாக இருக்கும்படியாகவே உன் மனதை அமைத்தார். இயற்கையிலேயே மனம் நமக்குக் கீழ்ப்படியாத இயல்புடையதாக இருக்குமானால், அந்த மனதின் காரியங்களுக்கு நாம் பொறுப்பாளிகளே அல்ல. இப்படிப்பட்ட நிலை மனிதனுக்கு இருந்தால் அவன் சுதந்திரமுள்ளவனாகவோ அல்லது படைப்புக்களிலேயே மிகச் சிறந்தவனாகவோ இருக்க முடியாது. ஆனால் உண்மை என்னவென்றால் நாம் ஒவ்வொருவருமே நம் மனதின் எஜமானர்கள். நீங்கள் எப்படி நினைக்கிறீர்களோ அப்படி மனதை உருவாக்க முடியும். மனம் முழுக்க முழுக்க நம் கட்டுப்பாட்டில் இருக்குமானால் அது புனிதமான நினைவுகளில் அன்றி வேறு எங்குமே செல்லாது. உடலை வளர்க்க வேண்டுமானால் அதற்கு உடலுக்குத் தீங்கு தராது உடலை வளர்க்கிற உணவை மட்டுமே தர வேண்டும். அது போலவே மனதை வளர்க்க வேண்டுமானால் புனிதமான நினைப்புகள், உயர்ந்த இலட்சியம், நல்லபேச்சுக்கள் முதலிய உணவுகளை மட்டுமே அதற்கு ஊட்ட வேண்டும். தீயநினைவுகள், தீயவர்களோடான பழக்கங்களான தீய உணவுகளைத் தவிர்க்க வேண்டும்.




# கண்ணனின் உண்மைத் தோற்றம்

நரேந்திரன்

மகாபாரதப் போர் முடிவு பெற்றது. மகாராஜா யுதிஷ்டிரருக்கு முடிசூட்டுவிழாவும் நடைபெற்றுவிட்டது. அப்போது கிருஷ்ண பகவான் சுபத்திரையை அழைத்துக் கொண்டு துவாரகைக்குப் புறப்பட்டார். அவர் துவாரகைக்குத் திரும்பும் வழியில் மேவார் தேசம் வந்தது. அங்கு ஓர் இடத்தில் மகா தேஜஸ்வியான உத்தங்க முனிவர் வசித்து வந்தார். கண்ணபெருமான் சுபத்ரா தேவியுடன் அங்கு வந்து சேர்ந்தார். கண்ணன் அந்த முனிவரை வணங்கித் தக்க முறையில் வழிபட்டார்.

அதன்பின் முனிவரும் கண்ணபெருமானை நன்கு வரவேற்று உபசாரம் செய்தார். இருவரும் ஒருவரை ஒருவர் நலன் விசாரித்து கொண்டும் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டும் இருந்தனர். அப்போது பாரதப்போரைப் பற்றியும், கௌரவர்களின் முடிவு பற்றியும் கண்ணபெருமான் அவரிடம் கூறினார். அதைக் கேட்டதும் முனிவரின் உடல் கோபத்தால் ஆடியது. கோபத்தோடு அவர் கண்ணனைப் பார்த்து, ''மதுசூதனா! கௌரவர்களும் உன் உறவினர்தாமே! அவர்களும் உன்னிடம் அன்பாகத்தானே இருந்திருக்கிறார்கள்? உன்னால் முடிந்திருந்தும் நீ அவர்களைக் காப்பாற்றாமல் போய்விட்டாயே! ஆகையால் இன்று நான் உனக்குச் சாபம் தரப்போகிறேன். ஐயோ! குருவம்சத்து மகாவீரர்களெல்லாம் இறந்து போய்விட்டார்களே! உனக்குச் சக்தி இருந்தும் நீ அவர்களை அலட்சியப்படுத்தி விட்டாய்!'' என்றார்.

முனிவர் கூறி முடித்ததும் கண்ணன் அவரிடம் கூறினார் :— ''பிருகுகுமாரரே! முதலில் நான் சொல்வதைக் கேட்டுக் கொள்ளுங்கள். தாங்கள் சிறு பிராயம் முதற்கொண்டு பிரம்மசரியம் காத்து வருவதையும் கடுமையான தவத்தில் ஈடுபட்டு வருவதையும் நான் அறிவேன். ஆனால் நீங்கள் நான் சொல்லும் இந்த விஷயத்தையும் மறந்துவிடக்கூடாது. அதாவது, எந்த மனிதரும் ஒரு சிறிது தவம் செய்ததனாலோ அல்லது அதிகமாகத் தவம் செய்ததனாலோ பெற்ற தவவலிமையைக் கொண்டு என்னை நிராகரிக்கவும் முடியாது. எனக்குச் சாபம் கொடுக்கவும் முடியாது. நான் இப்போது தங்களுக்குச் சில ஆன்மிகத் தத்துவங்களை உபதேசிக்கப்போகிறேன். அதைக் கேட்ட பிறகு தாங்கள் யோசித்து நல்ல முடிவிற்கு வாருங்கள்.

''மகரிஷியே! தங்களுக்கு ஒரு விஷயம் நன்கு தெரிந்திருக்க வேண்டும்; அதாவது ருத்திரன், வசு, தைத்தியர், யக்ஷர், கந்தவர், ராக்ஷஸர், நாகர், அப்ஸரஸ்திரீகள் மற்றுமுள்ள அனைவரும் என்னிடமிருந்து தோன்றியவர்களே ஆவர். அஸத், ஸத், ஸதஸத் இவை மட்டுமின்றி இருக்கின்ற உலகம் அனைத்தும் என்னிடமிருந்து வேறுபட்டதன்று. நான் தர்மத்தைக் காப்பதற்கும் ஸ்தாபிப்பதற்கும் அவ்வப்போது மகாத்மாக்களுடன் பலவித வடிவங்களில் அவதரிக்கிறேன். பிரம்மா விஷ்ணு ருத்திரன் இந்திரன் ஆகியோராக நான்தான் இருக்கிறேன. அது

போலவே உற்பத்தி பிரளயம் ஆகிய வற்றிற்குக் காரணமானவனும் நான்தான். தாயதத்திற்குக் குறைவும், அதர்மத்தின் வளர்ச்சியும் ஏற்படும் காலத்திலெல்லாம் நான் வெவ்வேறு பிறவியேற்றுத் தர்மத் திற்கும் நியாயத்திற்கும் பாடுபடுகிறேன்.

"நான் எபபோது தேவதைக்கு உரிய பிறவியில் அவதரிக்கிறேனே அப்போது என் எல்லாப் பழக்க வழக்கங்களும் தேவதை களைப் போலவே இருக்கும்; கந்தர்வப் பிறவியில் அவதாரம் எடுக்கும்போது கந்தர் வரைப் போல் இருக்கும்; நாக யக்ஷ ராக்ஷஸ யோனிகளில் அவதாரம் எடுக்கும்போது அவரவர்க்கு ஏற்றபடி என் நடவடிக்கை களும் இருக்கும். இப்போது நான் மனித



வுருவத்தில் பிறந்திருக்கிறேன். ஆகவே நான் கௌரவர்களிடம் மிகவும் எளியவனுக வேண்டிக்கொண்டேன். ஆனல் பேராசைப் பட்டிருந்த அவர்கள் நான் கூறிய எதையும் கேட்கவில்லை. எனவே யுத்தத்தில் உயிரை விட்டு இப்போது சுவர்க்கத்தை அடைந் திருக்கிறாகள்.''

கண்ணன் சொன்னதைக் கேட்ட உத் தங்க முனிவர், "ஜனர்த்தன! நான் யாவற் றையும் அறிவேன். தாங்கள் ஜகதீசுவரர். இப்போது நான் உங்களுக்குச் சாபம் தரப் போவதில்லை. தாங்கள் தற்போது எனக்கு விசுவரூபத்தைக் காட்டுங்கள்'' என்று பிரார்த்தித்தார். அதற்கிணங்கப் பகவான் தமது சநாதன விஷ்ணுஸ்வரூபத்தில் உதத்தங்கருக்குக் காட்சி அளித்தார். அத் துடன் வேண்டிய வரத்தைத் தம்மிடமிருந்து பெற்றுக்கொள்ளவும் அருள்புரிந்தார். அந்தப் பாலைவனப் பகுதியில் தண்ணீர் கிடைக்கவேண்டும் என்ற வரத்தை முனிவர் வேண்டினர். பகவான் அவரிடம், "எப் போதெல்லாம் உங்களுக்குத் தண்ணீர் தேவைப்படுகின்றதோ அப்போதெல்லாம் என்னை நினைத்துக்கொள்ளுங்கள். உடனே உங்களுக்கு வேண்டிய அளவு தண்ணீர் கிடைக்கும்'' என்று கூறி, துவாரகைக்குச் சென்றார்.

ஒரு நாள் உத்தங்க முனிவருக்குத் தாங்க முடியாத தாகம் எடுத்தது. நீரைத் தேடிக் கொண்டு நாலு திசையிலும் அலைந்து அவரது கால்கள் வலியெடுத்தன. அப் போதுதான் அவருக்குக் கண்ணபிரான் அருளிய வரம் நினைவுக்கு வந்தது. மறு விநாடியே கண்ணனை நினைத்தார். உடனே அவர்முன் தோன்றிய காட்சிதான் என்ன! உயரமான உருவம் கொண்ட சண்டாளன் ஒருவன் நாய்கள் புடைசூழ, நிர்வாணமாக வந்துகொண்டிருந்தான். அந்தச் சண் டாளன் தொடர்ந்து தாரையாகச் சிறுநீர் கழித்தபடியே வந்தான். அவன் முனிவரின் அருகே வந்து அவரிடம், "மகரிஷே! தாங் கள் தாகத்தால் தவிப்பதைக் காண எனக்கு மிகவும் இரக்கமாக இருக்கிறது. தாங்கள் வேகமாக என் அருகில் வந்து தாக சாந்தி செய்துகொள்ளுங்கள்'' என்றான்.

சண்டாளன் கூறியதைக் கேட்ட உத்தங்க ருக்கு வந்ததே கோபம்! அவனைக் கண்ட படி அவர் திட்டினர். தாம் தண்ணீர் கேட்ட தற்காகச் சண்டாளனின் முத்திரத்தைக் குடிக்க வேண்டுமென்று அனுக்கிரகம் செய்த அந்தக் கண்ணனையும் வாயில் வந்த படி தூற்றினர்.

முத்திரத்தை முனிவர் குடிக்க மறுத்த மறு கணமே சண்டாளன் நாய்களோடு அந்த

இடத்திலிருந்து மறைந்துவிட்டான். அப்போதுதான் அவருக்கு இவையாவும் கண்ணபிரானின் மாயை என்பது புரிந்தது. இதற்குள் ஸ்ரீகிருஷ்ணன் சங்கு சக்கரம் கதை ஆகியவற்றைத் தாங்கியபடி அவர்முன் காட்சியளித்தார் அவரை வணங்கிய உத்தங்கர் கண்ணனிடம், ''கேசவா! தாகமுள்ள பிராம்மணனுக்குச் சண்டாளனின் மூத்திரத்தைத் தருவது தங்களுக்கு ஏற்றதல்ல'' என்று கூறினர்.

ஆனல் மாயக்கண்ணனே மிகவும் இனிமையான குரலில், ''மனிதனுகப் பிறந்திருக்கும் தங்களுக்கு நேரிடையாக அமிர்தத்தைக் கொடுக்க முடியாது. ஆதலால் நான் சண்டாளனின் வேஷத்தில் இந்திரனை மறைமுகமாக அமிர்தத்தைத் தங்களுக்குத் தரும்படி அனுப்பி வைத்தேன். ஆனல் தாங்கள் இந்திரனை அறிந்துகொள்ளவில்லை. முதலில் தேவேந்திரன் தங்களுக்கு அமிர்தத்தை அளிக்க முன்வரவில்லை. ஆனல் நான் மிகவும் வற்புறுத்தவே, ஒரு நிபந்தனையின் பேரில் இந்த்ரனும் சம்மதித்தான். 'நான் சண்டாளனின் வேஷத்தில் என் மூத்திர வடிவில் அமிர்ததததை உத்தங்க முனிவருக்கு அளித்து அவரை அமரராக்கத் தயார். அப்படி அவர் அதை நிராகரித்துவிட்டால் அவர் என்றென்றும் அமிர்தம் கிடைப்பதனின்றும் வஞ்சிக்கப்பட்டவராவார். பிறகு என்ன முயன்ருலும் கிடைக்காது' என்று இந்திரன் என்னிடம் கூறிவிட்டான். எனக்கு, இந்திரன் கூறியபடி அமிர்தத்தைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளாமல் நிராகரித்தது குறித்து மிகவும் வருத்தம்தான். இந்திரனை அவ்வாறு நீங்கள் அவமதித்தது நல்லதல்ல. நன்று. தங்களுக்கு வேண்டியபோது தண்ணீர் கிடைக்க வேண்டுமானல் உடனே இந்தப் பாலைவனப் பகுதியில் எங்கு நீங்கள் இருக்கிறீர்களோ அங்கு மழை பெய்யும்; உங்களுக்குத் தண்ணீர் கிடைக்கும் என்று மறுபடியும் நான் தங்களுக்கு வரம் தருகிறேன். அந்த மேகங்களுக்கு உத்தங்க மேகங்கள் என்ற பெயர் இருக்கும்'' என்ருர்.

பகவான் இவ்விதம் கூறியதைக் கேட்ட உத்தங்கருக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. இப்போதுங்கூட மார்வார் நாட்டிலுள்ள பாலைவனப் பகுதிகளில் உத்தங்க மேகத்தால் மழை பொழிகிறது.

—மகாபாரதம், அச்வமேதபர்வம், அத். 53-56

---



பணம் புத்திசாலிக்குத் தாசனுய் உழைக்கிறது. முட்டாள்களை ஆட்கொள்கிறது.

— ஸிஸிலிப் பழமொழி

எதிர்பார்ப்பவன் ஏமாந்து போகலாம். அதனுல் எதிர்பாராதவனே பாக்கியசாலி.

— ஒரு துறவி

பதினுயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருக்கப் போவதாகக் கருதி வாழ்க்கையை நடத்த வேண்டாம். மரணம் நிச்சயம். இன்றோ, நாளையோ, அது எப்போதும் வரக் காத்திருக்கிறது. உயிருள்ள போதே நல்லவனுக இரு.

— மார்க்ஸ் ஒளரேலியஸ்

தேசம், காலம், பரிபக்குவம், குணதோஷம் ஆகியவற்றை அறிந்து பேசுபவனின் வார்த்தை வீண்போவதில்லை. ஆனல் பிரகஸ்பதியேயானலும் அசந்தர்ப்பமாக ஒரு வார்த்தை பேசிவிட்டால், முட்டாள் பட்டத்துடன் இழிவைப் பெறவே நேரும்.

— பஞ்சதந்திரம்

# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

மதவாழ்க்கையில் வெறும் பேச்சால் உண்மையாக எதையும் சாதித்துவிட இயலாது. ஆன்மபலத்துடனும் முழு முயற்சியுடனும் அது அப்பியாசம் செய்யவேண்டிய ஒன்ருகும். நமது மதநூல்களில் கூறியுள்ள பாடங்களைப் பேசும் யந்திரத்தைப் போல் திருப்பித் திருப்பிச் சொல்வதன்றி வேறென்றும் செய்யாமல் அதுவே போதும் என்று இருந்தால் ஓர் அடிகூட முன்னேற முடியாது.

எவனொருவனுக்கு உள்ளுக்குள்ளே சுயமான அனுபவம் இருக்கிறதோ அவனுக்குத் தான் ஆன்ம வாழ்க்கை உண்டு. எவனிடத்தில் ஞானத்தின் வித்து உள்ளதோ அவனிடத்தில் அதன் முளையும் கிளையும் படிப் படியாகத் தோன்றும். பெரிய ஆலமரம் ஒன்றைத் தோற்றுவிக்க எவ்வாறு அதன் விதை அவசியமோ அவ்வாறே முதலில் நம்மிடம் ஞானத்தின் வித்து இருக்க வேண்டும்; பிறகு மரத்தை வளர்க்கலாம்; அதாவது அடிப்படையான கருப் போன்ற ஒரு மூல எண்ணத்தை ஆதாரமாகக்கொண்டு நமது மனம் செயற்படவேண்டும்.

மூளையில் ஞானவாக்கியங்களை நிரப்பிக் கொண்டு அவற்றைப் பிறர் முன் சொல்வதனுல் எவனும் ஞானவானுகிவிட மாட்டான் பண்டிதர்கள் 'ஆகாயத்தில் உயரப் பறக்கும் கழுகுகளைப் போன்றவர்கள்' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறுவார். உயரப் பறந்தாலும் கீழே சவக்குழிகளில் கழுகின் பார்வை இருப்பது போல் அவர்களுடைய நோக்கம் காமத்திலும் பொருளிலுமே இருக்கும்.

ஆன்மிக வாழ்க்கைக்கு முதல் படி உண்மையைக் கைப்பிடித்தல். உயிருக்காகக்கூட உண்மையை விடக்கூடாது. உண்மைதான் கடவுள். ஆகையால் உண்மை உள்ளவனிடத்தில் கடவுள் இருப்பார். மனதாலும் வாக்காலும் காயத்தாலும் உண்மையைப் பின்பற்ருத இடத்தில் மத வாழ்க்கை இல்லை. அது இல்லாமல் எல்லா முயற்சியும் வீண். ஆகையால் முதன்முதலாக முழு மனதுடன் சிறிதும் பிறழாமல் உண்மையைப் பின்பற்ற முயற்சி செய். இறந்த காலத்தும் நிகழ் காலத்தும் எதிர்காலத்தும் எக்காலத்தும் உண்மைதான் வெற்றியுடன் விளங்குவது.

பலருக்கு ஆன்மிக வாழ்க்கையைப் பற்றிய நூலறிவு உண்டு. ஆனுல் அந்த அறிவைப் பயன்படுத்துவோர் எத்தனை பேர்? உண்மை விரதம் பூண்டவனுக்குத்தான் அது பயன் படும். வியாபாரத்தில் உண்மையை முற்றும் கைக்கொள்ள முடியாது என்று பலர் கூறுவதை நாம் கேட்டிருக்கிருேம்; ஆனுல் நான் அதை ஒப்புக்கொள்ள மாட்டேன். எங்கே உண்மை உண்டோ அங்கே கடவுள் இருக்கிருர். எந்த வியாபாரி உண்மையைக் கைக் கொண்டு அதைத் தன் வீட்டில் வைத்து வழி படுகிருனே அவனை தர்மசீலர்களுள் சிறந்தவனுக எல்லோரும் போற்றுவார்கள். அவனுடைய வியாபாரம் நிச்சயம் செழிக்கும்.

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் இல்லறச் சீடரான) நாக மஹாசயர் உண்மையைக் கைக் கொண்டவர். ஒரு தடவை ஒரு கடைக் காரன் ஒரு பொருளுக்கு நாலணு விலை கூறினுன். நாகமஹாசயர் உடனே அந்த விலையைக் கொடுத்தார். அருகில் இருந்த ஒருவர் இரண்டணு மதிப்புள்ள பொருளை நாலணுவுக்கு விற்று அவரை ஏமாற்றியதைக் கண்டு கடைக்காரனைக் கண்டித்தார். மறு நாள் நாகமஹாசயர் கடைக்கு வந்தபோது கடைக்காரன் தன் செயலுக்கு வருந்தி ஐந்தணு விலையுள்ள பொருளை சாதுவாகிய

அவருக்கு இரண்டணு விலை சொல்லிக் கொடுத்தான். நாகமஹாசயர், "ஏன் இப்படிச் செய்கிருய்? இது இரண்டணுவை விட அதிகம் மதிப்புள்ள பொருள். சரியான விலையை என்னிடம் வாங்கிக்கொள்" என்று வற்புறுத்தினுர். இதனுல் ஆச்சரியமடைந்த கடைக்காரன் அவருடைய திருவடிகளைத் தொட்டு அவரைப் போற்றினுன்.

உண்மையைக் கைக் கொண்டதனுல் ஒருவன் இழிவடையமாட்டான். உண்மையை விடாமல் பிடித்துக்கொண்டிருப்பவனிடம் ஆண்டவனுடைய அருள் பல வாய்க்கால்கள் வழியாக வந்து குவியும். உண்மையால் நீ ஆன்மிக வாழ்க்கையில் முன்னேறுவதோடன்றி உலகவியாபாரங்களிலும் செழிப்பை அடைவாய்.

உன்னிடம் உண்மை இருந்தால் மற்ற நற்குணங்கள் தாமாகவே உன்னை வந்தடையும், புலனடக்கம், மன அடக்கம் எல்லாம் வரும் நாம் உண்மையில் நம்பிக்கையை இழந்து விட்டோம். அதனுல்தான் இந்த இழிவான நிலையை எய்தியுள்ளோம். துன்பச் சுமையையும் பாவச் சுமையையும் தாங்க முடியாமல் தவிக்கிருேம். இனி நமது முழு முயற்சியும் இந்த நிலையை மாற்றப் பயன் படவேண்டும்; வெறும் பேச்சாலன்று; முழு பலத்துடன் உண்மையான உழைப்பால். இதுதான் ஆன்ம வாழ்க்கையின் அடிப்படை.

உள்ளும் புறமும் ஒத்திருக்க வேண்டும். எண்ணமும் பேச்சும் ஒத்திருக்க வேண்டும். தற்காலத்தில் நாம் வேஷதாரிகளாகிவிட்டோம். எண்ணுவது வேறு, பேசுவது வேறு. நேர்மை என்பது இல்லை. இது அறியாமை, மதிமயக்கம். ஆன்ம வாழ்க்கையில் நாட்டமுடையவன் பேசுவதையொழித்துச் சாதனையைக் கைக்கொள்ள வேண்டும். அப்படி முயல்பவனிடம் ஆண்டவனுடைய அருள் வந்திறங்கும். அவன் நிச்சயமாக இம்மையிலும் மறுமையிலும் மேன்மையடைவான்.

பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாழ்க்கையில் வெற்றியடைய விடுதலையடையப் பயனில் பற்றை விட்டுச் செயல் புரியச் சொல்லுகிருர். இது சிலர் கருதுவது போல் கலங்கிய மூளையின் கற்பனையன்று அந்த லட்சியத்தைக் கைக்கொண்டு சிறப்பான வாழ்க்கை நடத்துபவர்களை நாங்கள் கண்கூடாகப் பார்த்திருக்கிருேம். நாமும் அவர்களைப் போல, இங்கே இந்த வாழ்க்கையிலேயே விடுதலை அடையலாம். மற்ற அனைத்தையும் துறக்கவேண்டி வந்தாலும், இதுதான் அடைய வேண்டிய குறிக்கோள். இல்லையேல் பக்தி என்றும் முக்தி என்றும் நாம் பேசுவதெல்லாம் அர்த்தமில்லாத வார்த்தையாக ஒழியும். பற்றிலிருந்து விடுதலை அடையாதவரை உண்மையான பக்தி உதிக்காது.

நாம் வாழ்க்கையில் எந்த நிலையில் இருந்த போதிலும் முழு ஆன்ம பலத்துடன் 'ஜீவன் முக்தி எய்துவோம்' என்று திடமாகக் கூற வேண்டும். ஆனுல் அதற்கு வாழ்க்கை முழுவதும் அர்ப்பணம் செய்ய வேண்டும். பக்தியைப் பற்றிக் கேட்கப் பலர் விரும்புகின்றனர். அதைப் பற்றிய வாதம் இனியதே. ஆனுல் அதைப் பின்பற்றி வாழும்போது அது வாழ்க்கையின் உயிர்ச் சத்தையே கவர்ந்துகொள்ளும்.

ஒரு மனிதன் தனக்குப் பிரேமை (அளவு கடந்த பக்தி) வேண்டும் என்று ஆசைப் பட்டான். அப்போது தெருவில் ஒருவன் தலையில் ஒரு கூடையுடன், 'பிரேமையோ பிரேமை! வேண்டுவோர் வாருங்கள்' என்று கூவிக்கொண்டு போனுன். அதைக்கேட்ட சில குழந்தைகள் அது ஏதோ தின்பண்டம் என்று கருதி அவனைத் தொடர்ந்தனர். சில முதியவர்களும் பிரேமையை வாங்க வந்தனர். கூடைக்காரன் கூடையை இறக்கி வைத்து, 'யார் யாருக்கு எவ்வளவு வேண்டும்? எடை போட்டுத் தருகிறேன்' என்று சொல்லி ஒரு கத்தியை எடுத்து 'உன் தலையைக் கொடு; அதற்குச் சரியான எடை நான் தருகிறேன்' என்ருன்.

உங்களுக்குப் பிரேமை வேண்டுமானுல் அதற்குத் தரவேண்டிய விலை உங்கள் தலை. ஆன்ம வாழ்க்கை வேடிக்கை இல்லை, வெறும் பேச்சில்லை. தியானம், ஸர்வஸங்க பரித்தியாகம்தான் அதன் விலை. நீ ராதை

யைப் பற்றிக் கேட்டதில்லையா ? அவள் உயிருக்குப் பிரியமான அனைத்தையும் துறந்து அதனால் அவனை (ஸ்ரீ கிருஷ்ணனை) அடைந்தாள். நாங்களும் அம்மாதிரி வாழ்ந்தவர்களைப் பார்த்திருக்கிறோம். ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், நாக மகாசயர் போன்றவர்களின் வாழ்க்கை எங்கள் கண்முன் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. உனக்கு ஆன்ம வாழ்க்கை வேண்டுமானால் அவர்கள் காட்டும் வழியைப் பின்பற்று. உலக நாட்டமும் ஆன்மவாழ்க்கையும் ஒன்றுகூடி இருக்க முடியாது. எல்லாப் பற்றையும் துறந்தால்தான் ஆன்ம வாழ்க்கை கைகூடும்.

ஆண்டவனை நாடு, ஆத்மாவை அறி, ஞானக்களஞ்சியம் அப்பொழுது உனக்குத் திறக்கப்படும். அளவுகடந்த அறிவும் அளவுகடந்த ஆனந்தமும் வடிவாகிய ஆண்டவன் உனக்குள்ளே குடிக்கொண்டிருக்கிறான். பண்டைக்காலத்து ரிஷிகளின், தீர்க்கதரிசிகளின் அனுபவங்கள் மத நூல்களில் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் அவற்றைப் படித்தால் மட்டும் போதாது. ஆண்டவனைப் பற்றிய அனுபவங்களை நீ அடைய வேண்டும். அப்பொழுதுதான் மறைந்திருக்கும் ரகசியத்தின் வாயில் திறக்கும். 'அநாதிமத் பரம் ப்ரஹ்ம ந ஸத் தந் நாஸதுச்யதே'— பிரம்மம் ஆதியற்றது, அனைத்தையும் கடந்தது, என்று பகவத்கீதை கூறுகிறது.

இறைவனைப் பற்றிய ஞானம் அவன் கையில் உள்ளது. ஆகையால் அவனுடைய அருளை நாடு. அவனை உனது மனதிற்கு உகந்த லட்சியமாக ஆக்கிக்கொள். முழு மனதுடன் அவனை நேசி. அன்பு நிறைந்த உள்ளத்தில் அவன் பிரகாசிப்பான். எங்கள் குருநாதர் எங்களுக்குக் கற்பித்தது அதுதான்.

ஒவ்வோர் அவதாரமும் அவதாரபுருஷரும் உன்னதமான லட்சியங்களுக்கெல்லாம் உறைவிடமாக விளங்கினாலும் ஒவ்வொரு வரும் ஒரு முக்கியமான லட்சியத்தைப் போற்றியிருப்பதைக் காண்கிறோம். உதாரணமாக, ஸ்ரீசைதன்யர் பக்தியே உருவானவர். குளிர்ச்சியால் தண்ணீர் உறைவது போல் பக்தியே இறுகி உறைந்த வடிவம் சைதன்யருடையது. அவ்வாறே சங்கரர் ஞானமே உருக்கொண்டவர். புத்தர் துறவின் உறைவிடம், ஸ்ரீ கிருஷ்ணர் பற்றற்ற கருமத்தின் உதாரணம்.

கீதையில் பலவகைப்பட்ட வாதங்களுக்கும் மதக் கோட்பாடுகளுக்கும் சமரசத்தைப் போதிக்கிறார் ஸ்ரீ கிருஷ்ணர். கரும யோகமும் தியானமும் ஞானமும் பக்தியும் ஒரே லட்சியத்தை அடைவதற்கான சாதன வேறுபாடு என்று அவர் வற்புறுத்தினார். தமது வாழ்க்கையில் முக்கியமாகப் பற்றற்ற கருமத்தின் பாங்கை விளக்கிக் காட்டினார். பற்றற்ற கருமம் உள்ளத்தைத் தூய்மையாக்கும். அப்படித் தூய்மையான உள்ளத்தில்தான் வைராக்கியம் நிலைபெறும்.

புத்தர் வைராக்கியத்திற்கு உதாரணம். அவர் தமக்காக எதையும் வேண்டவில்லை. முக்தியைக்கூட வேண்டவில்லை. அவருடைய வாழ்க்கை முழுவதும் மனித வர்க்கத்தின் நன்மைக்காகவே அர்ப்பணம் செய்யப்பட்டது. வைராக்கியத்திலிருந்து ஞானம் உதிக்கும். ஞானத்திலிருந்து பக்தி. பக்தியில் பாமரர்களும் மூழ்கி நீராடுவதற்காகச் சைதன்யர் அவதரித்தார். ஆனால் அறியாத மக்கள் லட்சியங்களை வெவ்வேறாகக் கருதி மதப்பிணக்குகளை ஏற்படுத்திக்கொண்டார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவதரித்தது பிணக்குகளைத்தீர்த்து ஒற்றுமையை நிலைநாட்டுவதற்காக. சமரசக் கடல் போன்ற அவரிடம் வெவ்வேறு திக்குகளில் பாய்ந்த ஆறுகள் ஒன்று சேர்ந்தன.

"ஆண்டவனே ! வெவ்வேறிடங்களில் உதிக்கும் ஆறுகள் கடலில் கலப்பது போல் வேதங்களும் மதங்களும் எல்லா மார்க்கங்களும் வெவ்வேறிடங்களில் உதித்து ஒருவனாகிய உன்னையே வந்தடைகின்றன."



# ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் நிவாரணப் பணி

கடந்த இதழில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் நடத்திய நிவாரணப் பணிகள் பற்றிய சில விவரங்கள் கொடுத்திருந்தோம். அதன் தொடர்ச்சியாக இந்த இதழில் மேற்கு வங்காளத்தில் நடைபெற்ற பணிகள் தொகுத்துத் தரப்படுகின்றன. இதில் அடங்கியுள்ள தகவல்கள் அனைத்தும் பேலூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் மாத அறிக்கை (Monthly bulletin)யில் இடம் பெற்றவையாகும்.

* * *

கல்கத்தாவிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் இன்ஸ்ட்டிட்யூட் ஆப் கல்சர், மற்றும் மானஸாதீப், பெல்கேரியா, ரஹரா, நரேந்திரபூர், ஸரீஷா, சாரதா பீட், ஜயராம்பாடி, காமார்ப்புகுர், மித்னபூர், ராம் ஹரிபூர், சார்காச்சி, தமூலக் ஆகிய இடங்களில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் கிளைகள் மூலமாக, 1979 செப்டம்பரில் வெள்ளப்பெருக்கு ஏற்பட்டபோது பின்வரும் பொருள்கள் விநியோகிக்கப்பட்டன.

21,000 வேட்டிகள்
12,770 புடைவைகள்
70,045 சிறுவருக்கான உடைகள்
1,525 கம்பளிப் போர்வைகள்
16 மூட்டை அரிசி
15 மூட்டை பால் பௌடர்
47 மூட்டை சர்க்கரை
7 கார்டன்ஸ் கொகோ
4 மூட்டை உப்பு

பெல்கேரியா, ஜயராம்பாடி ஆகிய இடங்களில் உள்ள நமது மிஷனின் கிளைகளின் மூலம் அங்கு வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் 4 கார்டன்ஸ் குழந்தை உணவு (Baby food) விநியோகிக்கப்பட்டது.

அன்னை ஸ்ரீ சாரதாதேவியின் பிறந்த நாளன்று 10 கிராமங்களில் உள்ள 1,600 குடும்பங்களுக்கு 2,100 புடைவைகள், 1,100 வேட்டிகள், 2,600 சிறுவருக்கான உடைகள் ஆகியவை வழங்கப்பட்டன. அத்துடன் 7,000 மக்களுக்குக் கிச்சுரி பிரசாதமும் விநியோகிக்கப்பெற்றது.

வீடு கட்டுதல் & சாலைகள் அமைத்தல்

மாணவர், கிராம மக்கள் ஆகியோரின் உதவியுடன் தாரகேசுவரத்திலுள்ள ஆற்றின் இரண்டு கரைகளையும் இணைக்கும் ரோடு மிஷனால் போடப்பட்டது.

1980 ஜனவரி 12-ஆம் நாள் ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் பாலி கிராமத்தில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் புதிதாகப் போட்ட ஓர் இணைப்புச் சாலையைத் (Link Road) திறந்து வைத்தார். (இந்த ரோடு, பக்கத்தில் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டோருக்கு நமது மிஷனால் கட்டப்பட்டு வரும் வீடுகளைக் கட்டுவதற்கு உரிய கட்டிடச் சாமான்களை லாரிகளில் ஏற்றிச் செல்ல வசதியாக இருக்கிறது.) அதே தினத்தில் அவர், வெள்ளத்தினால் பாதிப்புற்ற 120 குடும்பங்களின் பொருட்டு, மிஷன் கட்டிக் கொண்டு வருகிற புதிய காலனிக்கு அடிக்கல் நாட்டினார்.

ஆராம்பாக் சப் டிவிஷனைச் சேர்ந்த டிக்ராவில் வெள்ளம் காரணமாகப் பாதிக்கப்பட்ட கிராம மக்களுக்கு 52 வீடுகளைக் கொண்ட அபயபாரி, 64 வீடுகளைக் கொண்ட நிர்சிந்த நிர், 2 பொதுநல விடுதியும் தங்கும் விடுதியும் கூடிய இரண்டு மாடிக் கட்டிடங்கள் ஆகியவை அடங்கிய புதிய காலனி ராமகிருஷ்ண மிஷனால் கட்டப்பெற்றது. இந்த ஆண்டு ஜனவரி 31-ஆம் நாள் வங்க முதலமைச்சர் திரு ஜோதி பாஸு அவர்கள் இந்தப் புதிய காலனியைத் திறந்து வைத்தார். திறப்பு விழாவில் ராமகிருஷ்ண மடங்களைச் சேர்ந்த துறவியர் பலரும் சுமார் 6,000 கிராம மக்களும் கலந்து கொண்டனர். மேலும், இந்தக்

காலனிக்கு அருகிலேயே சுமார் 2 ஏக்கர் நிலம் வாங்கப்பட்டு 520 வீடுகளில் முதல் கட்டமாக 80 வீடுகளைக் கட்டும் பணியை மிஷன் துவக்கியுள்ளது.

1980 ஜூன் 11-ஆம் நாள் புது ஜகத்பூரில் வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டோருக்கு, ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் புதிதாகக் கட்டி முடித்த 60 வீடுகள் கொண்ட புதிய காலனியை ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜீ மகராஜ் திறந்து வைத்தார். அன்றைய நிகழ்ச்சிக்கு மேற்கு வங்காள விவசாய அமைச்சர் பினய் கிருஷ்ண சௌத்ரி தலைமை வகித்தார். அதே தினத்தில் மிஷன் புதுப்பித்துக் கட்டிய 'மோதக் இல்லம்' என்ற வீட்டை ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜீ மகராஜ் அவர்கள் அந்த வீட்டுச் சொந்தக்காரரின் கொள்ளுப் பேரரான மோதக் என்பவருக்கு வழங்கினார். [ ஒரு சமயம் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கட்டலிலிருந்து காமார்ப்புகுருக்குத் தூய அன்னையுடன் சென்றார். அப்போது பெரு மழை காரணமாக மோதக் வீட்டில் மூன்று நாள் தங்கியிருந்தார். ]

**புயல் & தீ விபத்தின்போது**

1980 ஜூன் மாதம் நதியா மாவட்டத்தில் கிருஷ்ணநகர், நக்சிபாரா ஆகியவை புயலாலும் தீ விபத்தினாலும் பாதிக்கப்பட்டன. அவ் வமயம் 83 போர்வைகள், 106 புடைவைகள், 57 வேட்டிகள், 162 ஜோடி சிறுவருக்கான உடைகள், 87 லுங்கிகள், கடாய் டம்ளர் குடம் அகப்பை தட்டு ஆகிய அலுமினியப் பாத்திரங்கள் 83 செட்கள், மற்றும் அரிசி, பருப்பு, உருளைக்கிழங்கு, வெங்காயம், கடுகு, எண்ணெய், மிளகாய், உப்பு, மாம்பழம் ஆகியவைப் பெரிதும் பாதிக்கப்பட்ட 412 பேர்களுக்கு, பேலூர் தலைமைக் காரியாலயம் உடனுக்குடன் விநியோகித்தது.

**பஞ்ச நிவாரணம்**

புருளியாவில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் கிளை பஞ்சத்தினால் பாதிக்கப்பட்டோருக்கு 86 வேட்டிகள், 120 புடைவைகள், 100 சிறுவருக்கான உடைகள், 200 கம்பளி போர்வைகள் ஆகியவற்றை வழங்கியது.

*சான்றோர் பேச்சைக் குறைத்து, செயலைச் சிறப்பாகச் செய்துமுடிப்பர்.*

—கன்ப்யூஷியஸ்

o o o

*பணம் வாழ்க்கையின் லட்சியமாக ஆகி விட்டால் அது தவறான வழியிலே தான் தேடப்படும், தவறான வழியிலே தான் செலவழிக்கப்படும். அது தேடும்பொழுதும் செலவு செய்யும் பொழுதும் தீமை விளைவிக்கும்.*

—ரஸ்கின்

அத்துடன் மிஷன் அங்கு, பஞ்சத்திற்கு உட்பட்டவர்களும் வேலை செய்ய நிலம் இல்லாதவர்களுமாகிய மக்களை ஊரிலுள்ள பொதுக் குளத்தில் தூர் எடுக்கும் பணியில் ஈடுபடுத்தி, 'வேலைக்கு உணவு' என்ற முறையில் உணவு வழங்கியது.

இது தவிர, புருளியா, ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாபீடம் அக்கம்பக்கம் கிராமங்களில் பஞ்ச நிவாரண வேலைகளை மேற்கொண்டது. பல நீர்ப்பாசனத்திற்குரிய கிணறுகள், ட்யூப் கிணறுகள் கட்டப்பட்டு வருகின்றன. அத்துடன் 20,000 மணி நேரத்திற்குக் கிராம மக்களுக்கு வேலை வழங்கி ஒரு கிராமத்தில் பெரியதொரு பொதுக் குளத்தில் தூர் வாரும் பணியைச் செய்து முடித்தது.

பேலூர், ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் தலைமைக் காரியாலயம் பஞ்ச நிவாரணப் பணியின் ஓர் அங்கமாகப் புருளியா கிளையின் மூலம் 1000 வேட்டிகள், 1000 புடவைகளையும்; காமார்ப்புகுர் கிளையின் மூலம் 250 புடைவைகள், 250 வேட்டிகளையும்; ஜயராம்பாடி கிளையின் மூலம் 275 வேட்டிகள், 275 புடைவைகளையும் பாதிக்கப்பட்டோருக்கு வழங்கியது.

**கங்காசாகர் திருவிழாவில் மருத்துவப்பணி**

மக்கள் பல்லாயிரக்கணக்கானவர் குழுமும் கங்காசாகர் மேளாவின்போது, பேலூர் தலைமை நிலையம் லஸீஷா, மானஸாதீப் ஆகிய

இரண்டு இடங்களிலும் உள்ள ஸ்ரீராம கிருஷ்ண மிஷன் ஆச்ரமங்களின் மூலம் மருத்துவப் பணியை மேற்கொண்டது. திரு விழாவிற்கு வெளியூர்களிலிருந்து வந்திருந்து மருத்துவ உதவி தேவை என்ற நிலையில் இருந்த 31 நோயாளிகள் மருத்துமனையில் அனுமதிக்கப்பட்டனர். மற்றும் 5,491 நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிக்கப் பெற்றது. ரூ. 8,325 மதிப்புள்ள மருந்து வகைகள் இலவசமாக வழங்கப்பட்டன.

**ராஜஸ்தான்**

கேத்ரி பகுதியில் ஜுன்ஜ்னு மாவட்டத் பல பகுதிகளில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் பஞ்ச நிவாரணப் பணியாக இலவசமாக மாட்டுத் தீவனம் வழங்கியது. 7,496 மாடுகளுக்கு 86,874 கிலோ தீவனம் விநியோகிக்கப் பட்டுள்ளது.

**திரிபுராவில் நிவாரணப் பணி**

திரிபுராவில் கலவரத்தினால் பாதிக்கப்பட்ட பகுதிகளான அகர்தாலா, உதயபூர் மற்றும் திரிபுராவின் மேற்கு தெற்கு மாவட்டங்களில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் 26 அகதிகள் முகாம்களைத் துவக்கி நிவாரணப் பணிகளை நடத்தி வருகிறது. இந்த முகாம்களில் பெருமளவிற்குப் பாதிக்கப்பட்ட மண்டாய், பொராகா, மஹாராணி, டாகார் ஜலா, சம்பக்நகர், ஜம்பூஜலாய் உட்பட 50 கிராமங்களைச் சேர்ந்த அகதிகள் தங்கியிருக்கின்றனர்.

இங்கு ஜூன் 25 முதல் ஜூலை 25 வரை 5,094 அகதிக் குடும்பங்களுக்கு 4,674 வேட்டிகள், 9,799 புடைவைகள், 5,781 சமையல் பாத்திரங்கள், 1,147 மூங்கில் பாய்கள், 1,178 கம்பளிப் போர்வைகள், 405 ஹரிக்கேன் விளக்குகள், 85 ஸ்டீல் பெட்டிகள் விநியோகிக்கப்பட்டன.

மேலும் காயத்திற்காளான பெண்கள் குழந்தைகள் அடங்கிய 4700 பேர்களுக்குப் பால், ரொட்டி, பழம், தின்பண்டம் ஆகியவை வழங்கப் பெற்றன. 500 நோயாளிகளுக்கு மருந்து வகைகள் விநியோகிக்கப் பட்டன.

---



# உயர்வும் தாழ்வும்

இராமர் சீதையைத் தேடிக்கொண்டு போனார். இடையே இராவணனது வாளால் வெட்டுண்டு வீழ்ந்து கிடந்த சடாயுவைக் கண்டு புலம்பியழுதார். மனைவியைப் பிரிந்த கவலை ஒரு புறம், பெரிய பிதாவாகிய சடாயுவின் பிரிவுத் துன்பம் மறு புறம்.

அப்போது சடாயு இராமரை நோக்கி, ''மகனே! வருந்தற்க. இன்ப துன்பம் மாறி மாறி வரும் இயல்புடையன. சூரியனையும் அரவம் மறைக்கிறது. திங்களும் தேய்ந்து வளர்கிறது. ஆகவே வாழ்வில் தாழ்வும் உயர்வும் மாறி மாறி வரும்; அவற்றைக் கண்டு மதியுடையார் கலங்கக் கூடாது'' என்றார். ஏற்றத் தாழ்வுகள் வாழ்க்கையின் நியதி என்பதை விளக்கும் சடாயுவின் கூற்றாக அமைந்த அந்தப் பாடல் வருமாறு :—

பொங்கு வெங் கோளரா விசும்பு பூத்தன
வெங்கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்
அங்கண்மா ஞாலத்தை விளக்கும் ஆய்கதிர்த்
திங்களும் ஒரு முறை வளரும் தேயுமால்.




## அன்னை ஸ்ரீ சாரதாதேவி வரலாறு

[ஆசிரியர் : அ. லெ. நடராஜன், வெளியீட்டோர் : கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம், வேதாரண்யம் — 1980. பக்கங்கள் 440+12. விலை ரூ. 15]

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கும் அன்னை சாரதா மணி தேவியாருக்கும் இடையில் ஏற்பட்ட திருமண உறவு அதிசயமான ஆன்மிக உறவாகும். சாரதா மணிதேவி ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய மனைவியாகவும் சிஷ்யையாகவும், அவதார காரியத்தைத் தொடர்ந்து பூர்த்தி செய்பவராகவும், அவருடைய பணிப் பெண்ணாகவும், அவரால் பூஜிக்கப்பெற்ற தெய்வமாகவும் ஒரே காலத்தில் விளங்கினார். இது உலகம் காணாத அற்புதம். அவருக்கு உடல்சம்பந்தமான குழந்தைகள் இல்லை என்றாலும் அவரை 'அம்மா' என்று அழைத்துப் போற்றும் ஆன்மிகக் குழந்தைகள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றனர்.

சொல்லுக்கு அடங்காத சிறப்பு வாய்ந்த அன்னையின் வாழ்க்கை வரலாற்றையும் அதில் பொதிந்துள்ள போதனைகளையும் இந்த நூலாசிரியர் தொகுத்துத் தந்திருக்கிறார்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரிடமும் அன்னை சாரதா தேவியிடமும் அதிக ஈடுபாடும் உள்ளன்பும் கொண்ட திரு. வே. அப்பாகுட்டி அவர்கள் இந்த நூலைத் தாம் நடத்தி வரும் கன்யா குருகுலத்தின் வாயிலாக வெளியிட்டுள்ளார். குருகுல அச்சுப் பள்ளி மாணவிகளே இதை அச்சிட்டுத் தந்திருப்பதும் போற்றுதற்கு உரியது.

அ. லெ. நடராஜன் பல பெரியோர்களின் வரலாறுகளை ஆராய்ச்சி முறையில் வெளியிட்டுள்ள பெருமை வாய்ந்தவர். அவருக்கே உரித்தான தெளிவான இனிய தமிழ் நடையில் இதை ஆக்கியிருக்கிறார்கள்.

ஏற்கெனவே அன்னை சாரதா மணியின் வரலாறுகள் பல மொழிகளில் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் வாயிலாகவும் பிறர் மூலமாகவும் வெளியிடப்பட்டிருந்தாலும் இன்னும் எத்தனை வெளியீடுகள் வந்தாலும் அனைத்திற்கும் நல்ல வரவேற்பு இருக்கும். அது அந்தத் தெய்வப் பிறவியின் சிறப்பு.

ஸ்ரீகுருதேவரோ அன்னையோ போதனைகள் எவையும் புதிதாகச் செய்யவில்லை. கால தேசச் சூழ்நிலைக்கு ஏற்பப் பழைய கோட்பாடுகளுக்குப் புதிய விளக்கங்களாக அவர்களுடைய வாழ்க்கையும் போதனைகளும் அமைந்துள்ளன.

'கீழ்நோக்கி ஓடுவது தண்ணீரின் இயற்கை. ஆனால் சூரியகிரணங்கள் அதை ஆவியாக்கி வானில் உயர்த்துகின்றன. அது போன்று மனமும் இழிந்த பொருள்களான விஷயசுகங்களை நாடிப்போவது இயற்கை. ஆனால் கடவுளின் அருள் மனதை உயர்ந்த பொருளை நாடிச் செல்லும்படி தூக்கிவிடும்.' இது அன்னையின் உபதேசம். அன்னையின் அருள் நிறைந்த இந்த நூலும் படிப்போர் மனதை உலக நாட்டத்திலிருந்து உண்மை நாட்டத்திற்கு உயர்த்தும் சக்தி வாய்ந்ததாகும். இதைத் தமிழுலகம் விரும்பி ஏற்றுப் பயன்பெறும் என்பதில் ஐயமில்லை.

— அண்ணா

## ஸ்ரீவிடையபுரம் மகான் சரிதமும்

### மகாமாயா விலாஸ விளக்க உரையும்

[ஆசிரியர் : 'கல்யாண்' (T.V. கல்யாண சுந்தரம்). வெளியிட்டோர் : த்ரிசக்தி பதிப்பகம், 6, அந்தோணி தெரு, ராயப்பேட்டை, சென்னை 14; பக்கங்கள் : 156+16. விலை ரூ. 7]

சிக்கல் நிறைந்த இன்றைய வாழ்க்கை முறையில் எழும் அநேகம் கேள்விகளுக்கு விடைகளை இந்த நூலைப் படிப்பவர்கள் காண்பார்கள்.

பெயரிட்டுக் குறிப்பிடாமலே கர்மயோகம், பக்தியோகம், ராஜயோகம், ஞானயோகம் ஆகிய சீரிய மார்க்கங்களின் உயர்நிலைகள் ஆங்கங்கே விளக்கப்பட்டுள்ளன.

விடயபுரம் மகான் ஸ்ரீ சட்டாம்பிள்ளை சுவாமிகளுடைய வரலாறு, தெய்வ வழிபாட்டுமுறை, ஏழைகளுக்கு உதவி புரியும் பண்பு, ஆன்ம குணங்கள் எல்லாம் மனதைக் கவரும் வகையில் நூலாசிரியரால் அழகிய தமிழ் நடையில் தொகுத்தும் பகுத்தும் கூறப்பட்டுள்ளன.

ஆசிரியர் ஸ்ரீவித்யா உபாசகர். அவருடைய அனுபவத்தைக்கொண்டு பற்பல உபாஸனா ரகசியங்களை இந்த வரலாற்றுக்குள் அடக்கி வைத்திருக்கிறார்.

— அண்ணா



# வேதாந்த முழக்கம்

'அண்ணு' சுப்ரமண்யம்

**சத்தும் சித்தும் எங்கும் உள்ளன.**

**51.** அன்னமய தேகம் முதலாக ஐந்து கோசங்களில் உள்ள எந்த 'ஸத்' அல்லது இருப்பு என்ற தன்மை விளங்குகிறதோ, அந்த இருப்பு என்ற தன்மையே ஆத்மாவாகும்; அதில் சந்தேகமில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

**52.** அன்னமயம் முதலாக ஐந்து கோசங்களில் உள்ள எந்தப் பிரகாசம் அனுபவிக்கப்படுகிறதோ அந்தச் சித்பிரகாசமே ஆத்மாவாகும்; அது பிரிதன்று என்று வேதாந்தம் முழங்குகிறது.

**53.** அன்னமயம் முதலாக ஐந்து கோசங்களில் உள்ள எந்த விருப்பம் (ப்ரீதி) அனுபவிக்கப்படுகிறதோ, அந்த விருப்ப வடிவான ஆனந்தமே ஜீவசாட்சியாக உள்ள ஆத்மா என்று வேதாந்தம் முழங்குகிறது.

**54.** ஆகாயம் முதலான ஐந்து பூதங்களில் உள்ள எந்த 'ஸத்' அல்லது இருப்பு என்ற தன்மை மனிதர்களுக்கு விளங்குகிறதோ அந்த இருப்பு என்றதன்மையே பரப்பிரம்மம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

**55.** ஆகாயம் முதலான ஐந்து பூதங்களில் உள்ள எந்த ஒன்றேயாகிய சித் பிரகாசம் அனுபவிக்கப்படுகிறதோ அந்தச் சித் பிரகாசமே பரப்பிரம்மம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

**56.** ஆகாயம் முதலான ஐந்து பூதங்களில் உள்ள எந்த விருப்பம் அனுபவிக்கப்படுகிறதோ அந்த விருப்ப வடிவான ஆனந்தமே பிரம்மம் என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ 'அஸ்தி பாதி ப்ரியம் நாம ரூபம்' என்று ஐந்து அம்சங்கள் எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றன. இவற்றுள் முதல் மூன்றும் பிரம்மஸ்வரூபம்: பின்னுள்ள நாமம் ரூபம் என்ற இரண்டுமே பிரபஞ்சஸ்வரூபம். ]

**57.** அன்னமயம் முதலான கோசங்களில் உள்ள ஸத் அல்லது இருப்பு என்ற தன்மை எதுவோ அதுவே ஆகாயம் முதலிய பூதங்களில் உள்ளது. அதற்கு அளவு இல்லாததனுல் அதில் வேற்றுமை என்பது இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

**58.** அன்னமயம் முதலான கோசங்களில் உள்ள சித்பிரகாசம் எதுவோ அதுவே ஆகாயம் முதலிய பூதங்களில் உள்ளது. அதற்கு அளவு இல்லாததனுல் அதில் வேற்றுமை என்பது இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

**59.** அன்னமயம் முதலான கோசங்களில் உள்ள விருப்பம் எதுவோ அதுவே ஆகாயம் முதலிய பூதங்களில் உள்ளது. அதற்கு அளவு இல்லாததனுல் அதில் வேற்றுமை இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

**ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் வேற்றுமை இல்லை**

*60.* சச்சிதானந்த வடிவமாக இருப்பதனுல் ஆத்மாவானது பிரம்மமே; கோடிப் பிரமாணங்கள் இதை ஆதரிப்பதனுல் இதில் சந்தேகமே இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

*61.* ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் இருப்புத் தன்மையில் (ஸத்தாருபேண) வித்தியாசம் இல்லை; இருக்கும் தன்மையில் வித்தியாசத்

தைக் காண அளவு எதுவும் இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

62. ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் பிரகாசத் தன்மையில் வித்தியாசம் இல்லை; பிரகாசிக்கும் தன்மையில் வித்தியாசத்தைக் காண அளவு எதுவும் இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

63. ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் பிரியத் தன்மையில் வித்தியாசம் இல்லை ; பிரியத் தன்மையில் வித்தியாசத்தைக் காண அளவு இல்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

**பிரம்மம் ஸத்யம், ஜகத் மித்யை**

64. ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் நாமத்தையுடைய தன்மையில் வித்தியாசம் இல்லை ; நாமத்தின் வடிவத்திற்கு மித்யை இயல்பாதலால் என்று வேதாந்தம் முழங்குகிறது.

65. பிண்டத்திற்கும் பிரம்மாண்டத்திற்கும் உள்ள வித்தியாசத்தால் ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் வித்தியாசம் இல்லை. ஏனெனில், வியஷ்டிக்கும் சமஷ்டிக்கும் ஒற்றுமை இருக்கிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ **பிண்டம் — ஜீவ சரீரம் ; பிரமாண்டம் — ஈசுவர சரீரம்.** பல மரங்கள் சேர்ந்தால் தோப்பு ; தனி மரம் வ்யஷ்டி ; தோப்பு சமஷ்டி ; பிண்டம் வ்யஷ்டி, பிரம்மாண்டம் சமஷ்டி. தனி மரம் தோப்பில் அடங்குவதுபோல் ஜீவப் பிரம்ம ஐக்கியம். ]

66. பிரம்மம் உண்மை, உலகம் பொய் ; ஜீவன் பிரம்மமே வேறனதன்று. இதை அறிந்தவன் ஜீவன்முக்தன் என்று வேதாநதம் முழங்குகிறது.

**நாமருபமே உலகம்**

67. பெயரும் வடிவமும் எங்கும் மாறிக் கொண்டே இருப்பதனல் எப்போதும் அவை நிலைத்திருப்பவையன்று. அனைத்துமாக இருப்பது பெயரும் வடிவமும் இல்லாததாக இருக்கிறது என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ **நாமருபம்** — தனிப்பட்ட பொருளுக்கு நாமருபம் உண்டு. அதற்கு வடிவம் மாற மாறப் பெயரும் மாறும். அரும்பு மலராகிறது, மலர் காயாகிறது, காய் பழமாகிறது. அனைத்துமாக இருக்கும் பரம்பொருளுக்கு நாமருபம் இல்லை. ]

68. அனைத்துமாயுள்ள பரம்பொருள் நாமருபமில்லாதது ; ஸத்தேயாகவும் சித்தேயாகவும் உள்ளது. வேற்றுமை எப்படி இருக்கும், பந்தம் அல்லது தளை எப்படி இருக்கும் என்று வேதாந்தம் முழங்குகிறது.

69. சிறுவன், கிழவன் முதலிய பெயர்களால் மாறிக்கொண்டே இருப்பதனல் உலகமானது உள்ளது உள்ளபடி கூறப்படுவதில்லை என்று வேதாந்தம் முழங்குகிறது.

[ ஓர் அரும்பை அரும்பு என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே அது மலராகி வேறு பெயரை அடைகிறது. இன்று சிறுவனக இருப்பவன் ஒரு நாள் கிழவனகிறன். உலகில் எதற்கும் இதுதான் வடிவம் — இது தான் பெயர் என்ற நிச்சயம் இல்லை. ]

70. பெயரும் வடிவமும் நிலையாக இருப்பதில்லை. ஆதலால், நாமருப வடிவமான உலகம் இந்திரஜால மாயவித்தை போன்றது என்று புத்திமான்கள் அறிந்திருக்கிறர்கள் என்று வேதாந்தம் முழங்குகிறது.

கண்ணியில் சிக்கிப் போராடுவதைவிட, ஆசையூட்டும் பொருளை அறவே விலக்கு. — **டிரைடன்**

மனஉறுதி உள்ளவன் உலகைத் தனக்கு உகந்தவாறு உருவாக்கிக் கொள்கிறன். — **கெத்தே**

இந்த உலகில் மனிதனுக்குத் தேவை எல்லாம் மிகக் கொஞ்சம்தான். அதுவும் கொஞ்ச காலத்துக்குத்தான், — **கோல்ட்ஸ்மித்**

ஒரு சொல் போதுமானல் இரண்டு சொற்களை விரயமாக்காதே. எத்தனை சொல்லியும் பயனிருக்காதென்றல் ஒரு சொல்லையும் விரயமாக்குவானேன் ? — **சீன அறிஞர் சிங் செள**

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

## ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் ஊஞ்சல் சேவை

ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எல்லாக் குணங்களையும் அவஸ்தைகளையும் கடந்து விளங்குகிறார். அவர் அவற்றால் பாதிக்கப்படவில்லை; அவைகள் அவரைப் பாதிக்கவும் முடியாது. ஆனால், பக்தர்கள் அந்த ஒப்பற்ற பரம்பொருளைத் தங்கள் உள்ளத்திலேயே உணர்ந்து அனுபவிக்கிறார்கள். ஆகையால் பக்தர்கள், ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எப்போதும் உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் கவலையற்றும் இருந்து, தங்களுக்கு எல்லாவிதமான சௌகரியங்களையும் சௌபாக்கியங்களையும் க்ஷேமங்களையும் கொடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

இதுதான் திருமலையில் கண்ணாடிஹால் எனப்படும் அயன மஹாலில் நாள்தோறும் நடத்தப்படும் ஊஞ்சல் சேவையின் தாத்பரியமாகும். இந்தச் சேவை ஒவ்வொரு நாளும் மாலையில் ஆறு மணிக்குப் பிறகு நடந்து வருகிறது. உற்சவமூர்த்தி அழகாக அலங்கரிக்கப் பெற்ற ஊஞ்சலில் தம் தேவிமார்களுடன் எழுந்தருளுகிறார். கந்தம், சாமர உபசாரங்கள், வேதபாராயணம், பஜனை ஆகியவற்றுடன் ஸ்வாமி லேசாக ஊஞ்சல் ஆடுகிறார்.

மேற்கண்ட ஊஞ்சல் சேவை உற்சவத்தில் பங்குகொள்ள விரும்பும் கிருகஸ்தர்கள் ரூ. 1000 செலுத்தித் தங்கள் குடும்பத்தில் ஆறு பேர்களுடன் இந்த உற்சவத்தில் கலந்துகொள்ளலாம். அவ்விதம் உற்சவத்தில் பங்குகொள்ளும் கிருகஸ்தருக்கு ரூ. 250 பெறுமானமுள்ள தங்கடாலரும் வஸ்திர வெகுமதியும் அளிக்கப்படும்.

எக்ஸிக்யுட்டிவ் ஆபீஸர்,

**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.**

ஆசிரியர்: சுவாமி தன்மயானந்தர். துணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர்
பதிப்பாளர்: சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004
அச்சிடுபவர்: K. L. செல்லப்பன், சுத்தானந்தா அச்சகம், சென்னை 600 020